தீவுகளின் சந்திப்பு
(சிறுகதைகள்)



முதல் பதிப்பு : ஆகஸ்டு 1994

வெளியீடு :
புதுவை ரா. ரஜனி,
13, திருவள்ளுவர் வீதி,
திலகர் நகர்,
தட்டாஞ்சாவடி அஞ்சல்,
புதுச்சேரி-605 00[illegible]

அச்சாக்கம் :
ஜென்னிராம் அச்சகம்,
17, வன்னியர் தெரு,
சூளைமேடு,
சென்னை-600 094.

ஓவியம்:
டிராட்ஸ்கி மருது

விலை ரூ. 16-00

# மதிப்புரை

## பிரபஞ்சன்

புதுவை ரா. ரஜனியின் கதைகளில் வேகம் இருக்கிறது. வாசித்து முடித்ததும். 'அட...இவ்வளவு சீக்கிரம் கடலூர் வந்துவிட்டதே' என்கிற மாதிரி ஆச்சர்யம், இந்தக் கதைகளைப் படித்த பிறகும் ஏற்படுகிறது.

இந்த வேகம், இவர் நடையினால் ஏற்படுத்துகிற வேகம். தொடக்கமும் முடிவும் ரொம்ப அருகில் இருக்கிற மாதிரி, இவர் கதைகள் பெரும்பாலும் 'சிறிய கதை'யாகவே இருக்கின்றன.

சீக்கிரம் முடிந்துவிடக் கூடாதா என்கிற அலுப்பை ஏற்படுத்தும் கதைகள் இருக்கவே செய்கின்றன. சீக்கிரம் முடிந்துவிட்டதே என்கிற வருத்தத்தை ஏற்படுத்தும் கதைகளும் இருக்கவே செய்கின்றன. இக்கதைகள் இரண்டாம் ரகம்.

கதை சொல்ல, ஒரு வகையான வசனம் வேண்டியிருக்கிறது. அது, விஷயங்களைச் சுமந்துகொண்டு மேலே மேலே போய்க்கொண்டிருக்கிற மாதிரி

வசனம். இது கைவந்தால்தான் கதை வரும். ரஜனிக்கு, கதை சொல்லும் வசனம் கைவந்திருக்கிறது. ரயில் பெட்டிகள் தனித் தனியாக இருந்தாலும் அவை இயங்குகையில் ஒன்றே போல ஒருமித்துச் செயல்படுகின்றன அல்லவா! அந்த மாதிரி நிகழ்ச்சி அடுக்குகள் செயல்பட்டால்தான் கதை சாத்தியம். ரஜனிக்கு, இது சாத்தியப்பட்டு இருக்கிறது.

ரஜனி கதைகள் முன்வைக்கும் உலகம், ரொம்ப குறுகியது. இந்தக் கதைகள், பெரும்பாலும் இவர் கதைகள். ஒட்டலில் பணி ஆற்றும் ஒரு இளைஞன், இந்தக் கதைகளில் பெரும்பாலானவற்றின் கதா நாயகன். அவனுக்கு ஒரு 'வத்சலா' இருக்கிறாள். வத்சலா என்கிற மனுஷியை அடைய அல்லது அடையாமல் போவதன் ஆயத்தங்களாகச் சில கதைகள்; வெளி ஊரில் இருந்துவிட்டுச் சொந்த மண்ணுக்குத் திரும்பி பழகிய மனிதர்களைக்கண்டு ஆசுவாசப்படும் மனநிலையில் பல கதைகள். இதில் வித்தியாசமாக ஒரு கதை, 'அண்ணனின் குதிரை'. கதைகளின் களன், அவைகளின் விஸ்தீரணம் இன்னும் கூடி இருக்கலாமே என்று எண்ணாமல் இருக்கமுடியவில்லை. என்றாலும் ரஜனி, தனக்குத் தெரிந்ததை, தெரிந்ததை மட்டும் சொல்லவேண்டும் என்கிற ஆசைப்பட்டிருக்கிற அந்த நேர்மை எனக்குப் பிடித்திருக்கிறது.

அண்ணனின் குதிரை, நல்ல விஷயம். நன்றாகச் சொல்லவும் பட்டிருக்கிறது. ஒரு பிராமண வக்கீல், குதிரை வளர்க்கிறான் என்பது விஷயம். இது, வர்ண தர்மத்துக்கு விரோதம் என்று அந்தச் சமூகம் காண்கிறது. வேதம் படிக்கும் அப்பா, அதை வெறுக்கிறார். மனைவி, ஊரார் எல்லோருமே,

அதை விமர்சிக்கிறார்கள். ரஜனியின் நோக்கம், ஒரு ஜீவன்மேல் அன்பு செலுத்துவதில் 'வர்ண தர்மம்' குறுக்கிட முடியாது என்று சொல்வதுதான்.

இதற்கு மேலேயும், இந்தக் கதையின் பரிமாணத்தை அவர் வளர்த்தி இருக்க முடியும். குதிரையை, ஒரு பாட்சாதான் வளர்க்க வேண்டும் என்பது என்ன விதி என்று அவர் கேள்வி கேட்டிருக்கலாம். இன்று காலம், அதைக் கேட்டுக் கொண்டிருக்கிறதே! அத்துடன், குதிரையை ஒரு குறியீடாக்கி, மரபை மீறுதலை, அப்படி மீறுகிறபோது தனிமனிதர் களுக்கும் சமூகத்துக்கும் ஏற்படும் முரண்பாடு களை, 'மதிப்பீடுகள்' மேல், மாறிவரும் சமூகம் வைக்கும் விமர்சனமாக, தொடுக்கும் யுத்தமாகவும் மாற்றி அதை மத்திருக்கலாம்.

எதிர்காலம், அந்த இடத்துக்கு அவரைக்கொண்டு சேர்க்கும் என்று நம்புகிறேன். இது போன்ற ஒரு சிந்தனையை, ஜானி ஆப்ரஹாம், தன் 'அக்கிர காரத்தில் கழுதை' என்ற திரைப்படம் மூலம் செய் தும் இருக்கிறார்!

தொடக்கத்தில் வேகம் என்று சொன்னேன் அல்லவா?

பயணம் போகிற மனிதர்களில் இருவகை உண்டு. கல்யாணத்துக்குப் போய் பட்டம் கட்டிக் கொண் டிருக்கும்போதே சாப்பிட்டு, மறுவண்டி பிடித்து ஊர் திரும்பும் மனிதர்கள் பலர். அந்த ஊரின் விசே ஷம், வரலாறு, அதன் சின்னங்கள், வாழ்க்கை முறை இவைகளை அனுபவிக்கும் வெகு சிலரும் இருக்கவே செய்கிறார்கள். முதலாம் வகை

மனிதர்களுக்கு, அவகாசம், அவசியம் இரண்டும் இல்லை என்று புரிந்து கொள்ள வேண்டும். அதனாலேயே அவர்களை இரண்டாம்தர மனிதர்கள் என்று நான் அழைக்கத் தயாராக இல்லை. அவர்களை முன்னிறுத்தி இந்தக் கதைகளில் சில சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த வகையில் இந்தக் கதைகள் படிக்கத்தக்கவை.

எனக்கு ரயிலும் வேண்டும், பயணமும் வேண்டும். அதே சமயம், தண்டவாளத்து ஓரமாக நிற்கிற மரங்களுடன் பேசவும் வேண்டும். அவைகளின் இலைகளை, இலைகளில் ஓடும் நரம்புகளைப் பார்க்கவும் வேண்டும். என் போன்றவர்களுக்காகவும், ரஜனி கதை சொல்ல வேண்டும். சொல்வார் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

சிறு பத்திரிகை ஈடுபாடு, கனமான வெளிப்பாடுகளைக் கைக்கொள்வதில் ஆர்வம், புதுமைப்பித்தன் தொடங்கி வளர்ந்து வருகிற இலக்கியப் போக்கில் கவனம், தொடர்ந்து படித்துக் கொண்டிருப்பதில் மகிழ்ச்சி, இலக்கிய உரையாடல்களில் மட்டற்ற இன்பம் என்று வளர்ந்து கொண்டிருக்கிறார் ரஜனி. இது, ஆரோக்கியமான வளர்ச்சிப் போக்கை ரஜனிக்குத் தந்திருக்கிறது என்பதன் சுவடுகளை இந்தக் கதைகளில் நீங்கள் பார்க்கலாம். இப்போது எழுத வருபவர்கள் பலருக்கும் படிப்பு என்கிற அம்சம் குறைவு என்பதை நான் காண்கிறேன். எழுதுகிற வர்க்கத்துக்கு படிப்பு, செழுமையை, உலகளாவிய அறிவை, வளர்ச்சியைத்தரும் என்கிற உண்மையை ரஜனி புரிந்துகொண்டிருக்கிறார் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். இது அவருடைய பலங்களில் ஒன்று. தொடர்ந்த உழைப்பும், ஈடுபாடும் அவருக்கு

வெற்றிகளை ஈட்டித் தரும் என்று மனதார நம்பு கிறேன். அதற்கான மூலக் கூறுகள் இந்தக் கதை களில் வெளிப்படுகின்றன என்பது உண்மை. அடுத்த சில ஆண்டுகளுக்குப் பிறகு, பேசப்படப் போகிற ஒருவரை, இனி நீங்கள் படிக்கத் தொடங் கலாம்!

12-6-94
புதுச்சேரி-1

தோழமையுடன்,
பிரபஞ்சன்

# மனம்
# சார்ந்து
# வாழ...

புதுவை ரா. ரஜனி

சமுதாயத்தைக் கண்டு பொங்கி எழுதலில் மட்டும் படைப்புகள் பொதிந்திருப்பதில்லை. மனோரீதியாய், உழன்று கொண்டிருக்கும் வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட அதீத உணர்வுகளின் வெளிப்பாடாயும் இலக்கியப் படைப்புகள் திகழ்கின்றன. சமூக பிரக்ஞை நீங்கலாக, வாழ்வின் சுக-துக்க பகிர்வுகளுக்கு சாதனமாய், வடிகாலாக அவை மிகையின்றி பிரதிபலித்தால் அழகு.

எழுத்து, வாழ்க்கையை மீறி நிற்கும் ஆயுதம். வாழ்வின் மகத்துவத்தை மேம்படுத்த அல்லது தாழ்நிலைக்குக் கொண்டு செல்ல இவை காரணமாகின்றன. மேம்படுத்தும் தன்மையே இன்றைய 'இரண்டுங்கெட்டான்' உலகுக்கு அத்தியாவசியம். இலக்கியங்களால் மனம் சார்ந்த மாற்றங்கள்

மற்றும் நற்சலனங்கள் சிறு எதிரொலியாய் அமை யின் அதுதான் படைப்புகளின் பிரதான வெற்றி.

இலக்கியம் சாராமல் வாழ முடியாதா? பலர் வாழ வில்லையா? பிறகு, ஏன் காலங்காலமாய் படைப் பாளிகள் விழுந்து விழுந்து எழுதிக் கொண்டிருக்க வேண்டும்? தொழில் புரிதல், புசித்தல், உறங்குதல் வாழ்க்கையல்ல. அந்த வாழ்க்கையில் சுவையும் ஈடுபாடும் வேண்டும். நிலையான வாழ்தலில் மாற்றங்கள்தானே வாழ்க்கையின் மகத்துவத்தை புரிய வைக்கின்றன. மாற்றங்களை இலக்கிய ரீதி யாக உணரவைத்தல் சுலபம். ஆம், இலக்கியங்கள் நியாயமானவை!

எத்தனையோ நூற்றாண்டுகளாய் படைப்புகள் அக் கால வாழ்க்கையோடு ஒட்டிக்கொண்டு வந்துள்ளன. அவை மன அமைதிக்கு நல்ல மருந்தாய் இருந் திருக்கின்றன. அதீத 'கதை' தூக்கி போரிட்டவர் களும், போர்வாள் தூக்கியவர்களும் கால மாற்ற நிகழ்வுகளால் அணுவைப் பிளந்தவர்களும் சுகபோக வாழ்க்கையில் திளைப்பவர்களும் சமுதாய அமைப் பினால் சீர்குலைந்து நிற்பவர்களும் ஒன்றுகூடி மன அமைதிக்கு ஒன்றை ஏற்றுக்கொள்ளத் தக்க விதத் திலிருந்தது—இருப்பது—இலக்கியம். இது எந்தச் சாதனமும் பெறாத அளவிலா வெற்றி.

இன்றைய அவசர உலகின் பணம் சார்ந்த நியதியில் அதனைத் தவிர்த்து எழுத்துக்கும் வாசிப்புக்கும் வரும்போதுதான் மனிதனுக்கு ஆசுவாசம் கிடைக் கிறது. கொட்டும் மழையில் மூக்குக்கண்ணாடிக்கு சிறுதடுப்பு கிடைக்கும்போது எழும் நிம்மதி போல. எழுத்து என்பது கடினம். நிறையப் படித்து, சாறு பிழிந்து உட்கொண்டாலும் அது அமைதல் கடினம்.

இவற்றையெல்லாம் மீறி, அங்கீகாரம் பெற்று வருத லென்பது சுகப்பிரசவம் போல. ஒரு படைப்பாளிக்கு படைப்பு பிரசுரமாகும்போது எழும் பரவசம் வேறு எங்கும் கிடைக்காது.

என்னுள்ளும் ஆசாபாசங்கள் விரவியிருக்கின்றன. அவைகளை 'எழுத்து' மூலம் வெளிக்கொணர திருப்தியாய் இருக்கிறது. என்னை நிலைநிறுத்திக் கொள்ளவும் பலவகைப்பட்ட மக்களின் மனம் சார்ந்து வாழவும் இந்த படைப்புணர்வு உதவி புரிகிறது. இதுவரை நான் உணர்ந்த வாழ்க் கையை வெளிப்படுத்தியிருக்கிறேன். என் வயதுக் கும் அனுபவத்துக்கும் இப்போதைய வெளிப்பாடு இதுதான். ஈடுபட்ட அளவுக்கு வெற்றி கிடைக்கு மாயின் வாழ்வின் பயனை அடைந்ததாய் மகிழ்வேன்.

பொழுது போகாமல் இருப்பவர்களுக்கு இப்படைப்பு கள் பொழுதைப் போக்கினால் ஆனந்தம். பொழுது போக்கிலேயே சற்று வாழ்வின் இயல்பை அவை உணர்த்தினால் பேரானந்தம்.

எப்படியோ 'பிள்ளையார்சுழி' போட்டுக்கொண்டு எழுத முனைந்து கொண்டிருந்தபோது அதீத கிரியா ஊக்கியாய் என் குடும்பத்தார், நண்பன் ஜி. நாக தேவன், என் ஒருதலைக்காதலின் நாயகி............ இவர்களுக்கு என் முதல் வணக்கம்.

பெங்களூரிலிருந்து எனக்கு கடிதங்கள் மூலம் நிறைய இலக்கியக் கருத்துக்களை, அறிவுரைகளை அறிமுகப்படுத்திய பாவண்ணன் கூறுவது போல, 'எழுதுவது சுகம்'.

பிரசுரம் பெற்ற கதையை ஆழ்ந்து படித்து, கதை யின் போக்கு, சிறப்பம்சம், பிடித்த வரிகள்,

இடறல்களைக் கூறுவதில் முதன்மையாளரான ப. முருகேசன்......

வாழ்க்கையில் எப்படி சில இழப்புகளை ஈடு செய்ய முடியாதோ அப்படியே சில வரவுகளுக்கும் ஈடு கிடையாது. இடைசெவலுக்கும் எனக்கும் அப்படி யொரு 'பாத்தியம், உண்டானது நான் பெற்ற பெரும் பாக்கியம், கி. ராஜநாராயணன்! சின்ன பால்பாயிண்ட் பேனாவைக்கூட பொறுப்பாய் கவனிக்கக்கூடிய அவர், 'எழுத்து சிற்பம் மாதிரி; அதை செதுக்கி செதுக்கி எழுதணும்...!' என்பார். இப்படி பல அறிவுரைகள், மேற்கோள்கள், புத்தகங் கள் அளித்து எனக்குள் ஆர்வத்தை வளர்ப்பவ ருக்கும்...

மதிப்புரை வழங்க மனமுவந்து ஏற்றுக்கொண்ட எனக்கு மிகவும் பிடித்த படைப்பாளிகளில் ஒருவரான பிரபஞ்சன் அவர்களுக்கும்......

கடந்த ஜனவரியில், பல அலுவல்களுக்கிடையே எனது 'மாறுவதில்லை...' சிறுகதையைப் படித்து விட்டு அடிமுதல் நுனிவரை விமர்சனம் செய்து என்னுள் பெரும் ஊக்கத்தை ஏற்படுத்திய இயக்குநர் பாரதிராஜா அவர்களுக்கும்......

இந்த அழகிய தொகுப்பு உருவாக மிகவும் பாடுபட்ட பழநிபாரதி, கவிஞர் அறிவுமதி, பொன்விஜயன் அவர்களுக்கும்...

மற்றும் என் படைப்புகளுக்கும் தொகுப்புக்கும் பல் வேறு வகைகளில் ஆதரவு கொடுத்த திருச்சி அமுதன் அடிகள், பேரா. ஆல்பர்ட், பேரா. பூர்ண சந்திரன், 'உணவுக் கலை நிறுவன' முதல்வர் எம். பொன்னிளங்கோ...

புதுவை அரிமதி தென்னகன், மக்கள் தொடர்பு அதிகாரி அருணகிரி, பாஞ். ராமலிங்கம், வ. பழம்நீ, செல்வி எம். தமிழரசி......

வண்ண நிலவன், வண்ணதாசன், மாலன், சுதாங்கன் ஆர். சூடாமணி, இயக்குநர்கள், பாலுமகேந்திரா, மகேந்திரன், 'சலாம்பாம்பே' மீரா நாயர்......

கடலூர் ஆர். வேலுமணி, தஞ்சை பா. து. பிரகாஷ், பேரா. மது. ச. விமலானந்தம், திருத்துறைப்பூண்டி டி. ஜெ. பிரிட்டோ, சென்னை டி. எஸ். மதுரம், 'ராஜம்' சந்திரா ராஜசேகர், ஹைதராபாத் சந்திரா ரமேஷ், தோப்புக்கானா அ. வ. இளங்கோ, மதுரை பி. மனோகரன், மதுராந்தகம் பொன். வாசுதேவன், இராஜபாளையம் எம். முத்துவேல்......

அன்பர்களுக்கு என் நன்றிகள்

அன்புடன்,
புதுவை ரா. ரஜனி

13, திருவள்ளுவர் வீதி,
திலகர் நகர்,
தட்டாஞ்சாவடி அஞ்சல்,
புதுச்சேரி-605 009.

சமர்ப்பணம்

சகோதரன் ரா. தேவ் ஆனந்துக்கும்
வானொலி முல்லை வளவனுக்கும்

# ஒரு நண்பனின் கதை

○

ஏழு மணிக்கு அருமைராஜன், பால்வண்டி ஏறி இறந்துவிட்டதாக, சைக்கிளில் வந்திறங்கிய ஒடிசலான ஆள் சொன்னான்.

''ஐயோ, என்னப்பா...?''

''ஆமா ஸார்! காலையில எம்.எல்.ஏ.வைப் பார்க்க சைக்கிள்ல போனாராம். எதிர வந்துட்டிருந்த வண்டி நெஞ்சில் ஏறி, ரோட்லயே நாடி அடங்கிடுச்சு...''

''இப்ப பாடி எங்கேயிருக்கு?'' எனக்கு கண்களில் ஈரம் கோர்த்துக் கொண்டது.

''இன்னா ஸார்?''

''இப்ப பாடி எங்கயிருக்குன்னேன்...''

''பெரிய ஒப்பித்தோல்லதான். வார்டு நம்பர் மூணு. தனலட்சுமி அம்மாதான் என்னை அனுப்பிச்சாங்க. பெரிய புள்ள நேத்துதா ஏர்போர்ஸ் பரிட்சயெழுத கோயம்புத்தூர் போனானாம். தந்தி கொடுத்திருக்கோம். பெரியவங்க யாருமில்ல. அதா கையோட உங்களைக் கூட்டிக்னு வரச்சொன்னாங்க...''

''நீ போப்பா. நா இதோ வண்டில வந்துட்டறேன்...''

அருமைராஜன். நான் நான்காம் வகுப்பு படிக்கும் பொழுது திருநெல்வேலியிலிருந்து வந்து உடன் சேர்ந்தவன். அது கல்லூரி வரை சென்றது. எந்நேரமும் எங்கள் வீட்டி லேயே கிடந்தவன். அவனது தாயைவிட, என் தாயிடம் பழகிய நாட்கள் அதிகம். வீட்டையே நினைக்க மாட்டான். எப்பொழுதும் என்னை, என் வீட்டைச் சுற்றி.

நான் 'நோட்ஸ்' காப்பியெடுத்துக் கொண்டிருக்க, அம்மாவுக்காக மண்ணெண்ணை 'க்யூவில்' நின்று, நான்கு மணி நேரங்கள் கழித்து, பத்து லிட்டரோடு உள்ளே நுழை வான். சிலசமயம் கைவீசிக் கொண்டும் வருவதுண்டு. முருங் கைக்கு பாத்தி கட்டுவான். மஞ்சள் தூள், காப்பிப்பொடி வாங்க வெட்கப்படாமல் ஓடுவான். தங்கை வத்சலாவுக்கு கணக்கும் ஆங்கில இலக்கணமும் கற்றுக் கொடுப்பான்.

அம்மா என்னைத் தூற்றுவாள். "ஏண்டா, ஒரு நாளைக் காவது நீ கடைக்குன்னு போயிருக்கியா? எல்லாத்துக்கும் வத்சலாவை அனுப்புறதுல நிப்ப. ராஜியைப் பாத்து கத்துக் கடா. அவசரத்துக்கு இதெல்லாம் தெரியணும். இப்ப செய்ய மாட்டீங்க, பொண்டாட்டிக்காரி வந்தா ஒரு வேலையைச் செஞ்சுட்டு அடுத்த கட்டளைக்கு கால்ல விழுந்து கிடப் பீங்க...!"

வத்சலா, எனக்கு ஏச்சு கிடைத்ததைக் கண்டு வளையல் குலுங்கச் சிரிப்பாள். அருமைராஜன் பெருமையாய் நிற்பான்.

"டேய்! இனிமே நீ வீட்டுக்குள்ள நுழைஞ்ச, காலை வெட்டிடுவேன்..." என்று அவனிடம் பொய்க் கோபம் காட்டுவேன்.

எனது செகண்ட் ஹாண்ட் பைக் எண்ண ஓட்டங்களுக்கு ஏற்ப, தனது முழு ஒத்துழைப்பைக் கொடுத்தது. 'நேற்று இருந்த என் நண்பனின் உயிர் இன்று இல்லையா?'

அவனுக்கு இலக்கியத்தில் அதிக நாட்டம் உண்டு. ஏதேதோ கிறுக்கிக்கொண்டு வருவதுபோல் எனக்குத் தோன்

றும். ''இது கவிதை, இது கதை'' என்று அடிக்கடி எடுத்து வருவான். எனக்கு இலக்கியப் பக்கம் சுட்டுப் போட்டாலும் வராது. பேப்பர் படிப்பதற்கே என் முகம் அஷ்ட கோணலாக மாறிவிடும். என்னை புரிந்து கொண்டவன், பிறகு வத்சலா விடம்தான் தன் படைப்புகளைக் காட்டுவது வழக்கம்.

வத்சலா, அவனது படைப்புகளில் சிலாகித்துப் போவாள்!

''உங்களுக்கு மட்டும் எப்படி எழுத வருது? எழுதறது ஏன் எல்லாருக்கும் வர மாட்டேங்குது?" என்று அவனிடம் ஆச்சரியப்படுவாள். அவன் அவளிடம் மனம் விட்டுக் கூறு வான்:

''வத்சலா, நா பெரிய ஆளா வரணும். இலக்கியத்திலே, ஓவியத்திலே என்னை ஆட்படுத்திக்கணும். உலகம் முழுதும் என்னை வரவேற்கணும். ஒரு கதை மூலமா, பலரோட மனசிலே பூந்து வரணும். என்னோட 'ஆம்பிஷனே' இது தான்...!''

வார்டின் வாசலில் காத்திருந்தவர்கள், என்னைக் கண்ட தும் பரபரப்படைந்தனர். அருமைராஜனின் தூரத்து உறவு மாமா என்னிடம் ஓடி வந்தார்.

''பனமரம் மாதிரி வளந்தபுள்ள சாஞ்சுட்டுது. உள் ளாறக் கொண்டு போயிருக்காங்க. கொஞ்சம் தெரிஞ்ச டாக்டரை வச்சு, பாடியை சீக்கிரம் கிடைக்க வழி பண்ண முடியுமான்னு பாருப்பா...''

மருத்துவமனையின் சகல பாகங்களுக்கும் சுழன்றேன். தெரிந்த டாக்டர்கள் மூலம் சரிகட்டினேன். காவல்துறையை அவர்கள் சரிபடுத்தினர். ஒரு வழியாய் மருத்துவமனை வண்டியில் அருமைராஜன் ஏற்றப்பட்டான். அமளிதுமளி யால் அவனது முகத்தைக்கூட பார்க்க இயலவில்லை. நான் வண்டியைப் பின் தொடர்ந்தேன்.

இனி, எனக்கென்றிருந்த நண்பன் கிடையாதா? சிறு பருவம் முதல் தொடர்ந்த அந்த நட்பின் வலிமை சிதைந்து விட்டதா? ஒருவேளை நான்தான் இந்த சம்பவத்திற்கு காரணமானவனா! என் தூண்டுதலின் பேரில்தானே அந்த வேலையென்னும் புதையலைத்தேடி அவன் அலைந்திருக் கிறான்.

அன்று அவன், என்னிடம் தனியாகப் பேச வேண்டு மென்றதின் பேரில் 'பொடானிகல் கார்டன்' போனோம். நூறுவயது, இருநூறு வயது தாண்டிய மரங்களுக்கு மத்தியில் ஏதோ சிந்தனையில் இருந்தான்.

''ம்...சொல்லுடா? வாட்ஸ் த மேட்டர்?''

''..................''

''அமைதியாயிருந்தா? ஏதாவது பணப் பிரச்சினையா? எதுவாயிருந்தாலும் சொல்லு...''

''ஒண்ணு கேட்டா என்மேல கோபம் வராதே உனக்கு?''

''அப்பிடீன்னா...?''

''நான், வத்சலாவைக் காதலிக்கிறேன். எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு. அவளைக் கல்யாணம் பண்ணிக் கணும்னு ஆசை. என்பக்கம் ஓ.கே. வாங்கத் தயார். உன் சம்மதமும் வீட்டுச் சம்மதமும்...''

நான் அதிர்ச்சியடைந்தேன்.

''என்னடா சொல்றே?'' என்றேன்.

''எஸ். வத்சலாவைக் காதலிக்கிறேன். எனக்கு அவளைப் பிடிச்சிருக்கு...!''

''அவளுக்கு உன்னைப் பிடிச்சிருக்கா?''

''ப்ச்! தெரியலை. பிடிச்சிருக்கலாம்!''

''தோ பாருடா. இது ஆரஅமர யோசிக்க வேண்டிய விஷயம். நம்ம ரெண்டு குடும்பத்துக்கும்தான். அவ படிச்சுக் கிட்டிருக்கா. அவளைப் பெரிய ஆளா உருவாக்கனும்னு நினைச்சுக்கிட்டிருக்கேன். உனக்கும் ஒரு ப்ளஸ் பாயின்ட் தேவை. முதல்ல ஒரு வேலையைத் தேடிக்கோ. அப்புறம் வா. இந்த விஷயம் நம்ம கூடவேயிருக்கட்டும். அதுவரைக் கும் வத்சலாவுக்கு இது தெரிய வேணாம். பெஸ்ட் ஆஃப் லக்...!''

என் பதிலைக் கேட்டதும் அவன் கண்கள் பனித்தன. கைகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, ''தாங்க்ஸ்...'' என்றான்.

ஆனால், வத்சலாவிடமிருந்து என்னால் எதையும் கிர கிக்க முடியவில்லை. அவள் சலனமின்றிக் காணப்பட்டாள். அவளது மனத்தைப் பற்றி என்னால் அறிய இயலவில்லை.

○

அருமைராஜன் கிடத்தப்பட்டான். சிற்பம் போல கம்பீர மாகக் காணப்பட்டான். எனக்கு அவனது அசைவற்ற உடலைக் காணக்காண முதுகுத்தண்டு சிலீரிட்டது. எல்லோ ருக்குமான அழைப்பை செயல்படுத்தினேன். மேற்கொண்டு ஆகவேண்டிய செயல்களுக்குத் தோளாய் நின்றேன். எனது உடல்மட்டும் செயற்பட்டுக் கொண்டிருக்க, மனம் அவனைச் சுற்றியே இருந்தது.

ஒரு வசந்தகாலப்பறவையாய் சிறகடிக்க வேண்டியவன், ஒடிந்து விழுந்து கிடக்கிறான். ஒரு காதலை யாசித்து ஏங்கி னவன்—ஏமாற்றப்பட்டு இந்த மண்ணுக்குள் படிந்துபோக தயாராகி விட்டான். அவனது ஆசைகள் அசைவற்று விட்டன.

யாரோ என் தோளோடு சாய, பார்க்கிறேன். என் தங்கை வத்சலா விசும்பலுடன் இறுக்கிக் கொள்கிறாள்.

அம்மா அதிர்ச்சியில் அருமைராஜனின் தாயின் அதிர்ச்சியைப் போக்க தாங்கிக் கொண்டிருக்கிறாள்.

காரியங்கள் நடந்து முடிந்தன. இரவு, கிணற்றடியில் தலைமுழுகி வீட்டுக்குள் நுழைகின்றேன். ஊஞ்சலின் அருகிலிருக்கும் தாழ்வாரத்தில் வத்சலா குத்துக்காலிட்டு முகம் புதைத்து இருந்தாள். காலடிச் சத்தம் கேட்டு நிமிர்ந்தாள். அழுது சிவந்த முகம். தலை கலைந்து நெற்றியில் சாந்துப் பொட்டு அழிந்து கிடந்தது. அவளது நெற்றியைப் பார்க்க அழகாயில்லை.

''வத்சலா!'' அவளைப் பொட்டு வைத்துக்கொள்ளச் சொல்வதற்காக மெல்ல அழைத்தேன். மனதுக்குள் ஏதோ நெருடியது.

''ம்...?"

''ஒண்ணுமில்ல. அம்மா எங்கே?" என்றேன். ●

தாய்
ஆகஸ்ட் 1991

# ஜக்கம்மா

○

ஜக்கம்மா என்று பெயர் வைத்தது, அண்ணன்தான்.

''ஏ... ஜக்கம்மா...!'' என்று கூப்பிட்டால் போதும்.

''இன்னா...?'' என்று கைகளை முன்நீட்டி, விரல்களை மடக்கிக்கொண்டு, மார்புகள் நிமிர நடந்து வந்து 'டக்கென்று' நிற்பாள்.

அண்ணன் உட்பட நாங்களும் சிரிப்போம்.

ஜக்கம்மாவிற்கு வயது ஐம்பது இருக்கும் என்று சொல்லலாம். தலைசற்று நரைத்திருக்க, இருபக்க கன்னங்களின் மத்தியில் இரு மடிப்புகள்கூட விழுந்து விட்டன. ஆளைப் பார்த்தாலே, மனநிலை சரியில்லாதவள் என்று தெரியும். நூல்புடவையை கன்னாபின்னா வென்று 'தேமே' என்று சுற்றிக்கொண்டு சுழன்று, சுழன்று வேலை செய்யத் தொடங்கி விடுவாள்.

முதல்நாள், கும்பா கனலால் சூடாகி, பழுப் பேறி, கருப்பேறிக் காட்சியளிக்கும். அதனை விடியற்காலையில் பார்த்தால், சலவைக்குப் போய்விட்டு வந்ததுபோல புதுக்கும்பாவாய்... முகம்பார்த்து, தலைவாரிக் கொள்ளலாம்போல

காட்சியளிக்கும். சாம்பார் அண்டா, இட்லி போட்டு வைக்கும் பெரிய அலுமினிய வட்டா, வடைகளுக்கான பெரிய தட்டு, பால் வீச்சம் வீசும் தவலை, டீ கிளாஸ்கள் கழுவக் கூடிய பாத்திரம், சின்னக் கெட்டில், கை கழுவ தண்ணீர் வைத்திருக்கும் பெயிண்ட் பூசப்பட்ட இரும்பு டிரம் என்று அனைத்துப் பொருட்களும் ஜக்கம்மாவின் மேற்பார்வையில் தான் இருக்கும்.

''அண்ணத்தே...கொஞ்சம் சாம்ப...'' என்று பாத்திரம் விளக்க சாம்பல் கேட்பாள். அண்ணன் கைநிறைய சாம்பலை அள்ளிக் கொடுப்பார்.

பக்கத்திலிருக்கும் தோழர் ராமையா, ''இன்னாண்ணே, சாம்பல் குடுத்துக்னு இருக்கீங்க...?'' என்று கிண்டல் பண்ணுவார். அதற்கு அண்ணன் சிரித்துக் கொள்வார்.

''பாருங்க, கணேசன்! எப்பிடி கிண்டல் பண்ணிக்னு இருக்காரு...!'' என்று என்னிடம் கூறிவிட்டு, வெட்கப் படுவது போல நடித்துக் காட்டுவார். அவளைப் பார்த்து ஒரு முறை புன்னகைத்துக் கொள்வார். அண்ணனுக்கு எங்களோடு அவளைப் பார்த்தாலே சிரிப்பாய்த்தான் வரும். இயல்பாகவே அண்ணனுக்கு சிரித்த முகம். நான், ஜானி, மணி, தோழர் ராமையா உட்பட எங்கள் குழு மொத்தமே அவரது புன்னகைக்கு அடிமை. பொய்யற்ற புன்னகை. அப்புன்னகையிலேயே பசி அடங்கிவிடுவது போல எனக்குத் தோன்றும். இருநூறு, முன்னூறு கிலோ மீட்டர்கள் தாண்டி, தாயை, தகப்பனை, மனைவியை, தம்பிகளை, தங்கைகளை விட்டுவிட்டு பிழைப்புக்காக வந்திருக்கும் எங்களுக்கு அவரது அன்யோன்யமான சிரிப்பு பிடித்துப் போனதில் ஆச்சரியமில்லை.

ஜக்கம்மா தண்ணீர் பிடித்துக்கொண்டு வந்தாள்.

''எங்க புடிச்சீங்க, இவங்களை...?'' என்று கேட்டேன்.

அண்ணன், புன்னகை வெளிப்பட, "ஒரு மாசம் இருக்கும். ராத்திரி நல்ல மழை. வந்து ஒதுங்குச்சு. சாப்புட கேட்டுச்சு. குடுத்தேன். அப்புறம், கடையோரமா குந்திக்னு வெறிச்சுக்னு இருந்துது. மறுநா பார்த்தா, நா சொல்லாமலேயே எல்லாத்தையும் இழுத்து போட்டுக்னு சுத்தம் செய்ய ஆரம்பிச்சுடுச்சு..." என்றார்.

''ஒம் பேரு இன்னா...?" தோழர் ராமையா, பீடியைக் கன்னத்தில் குழிவிழ இழுத்துக் கொண்டே ஒருநாள் கேட்டார். அதற்கு அவள் அவரைப் பார்த்து முறைத்துவிட்டு தான்பாட்டுக்கு வாழையிலைகளை நறுக்கிக் கொண்டிருந்தாள். அண்ணன்தான், ''ஜக்கம்மான்னு வச்சுக்கோங்க...!'' என்று சொல்லிவிட்டு...

''ஜக்கம்மா... ஜக்கம்மா... ஜக்கம்மாவா...?'' என்று அவளிடம் குழந்தைபோலக் கொஞ்சினார். அவளுக்கு வெட்கம் சேர்ந்து கொண்டது போல. ''இன்னா...?" என்று ஒரு நொடிப்பு நொடித்து, ஒரு வாழையிலையை அவர்மேல் தூக்கியெறிந்தாள். தோழர் ராமையா விழுந்து விழுந்து சிரித்தார். ஜானி, அவளையும் அண்ணனையும் மாறிமாறிப் பார்த்து வியப்பான். எங்களிடம் சிலாகிப்பான்.

''கவலையில்லாத மனுஷங்க யாருன்னு கேட்டா, அண்ணனும் ஜக்கம்மாவும்தா...!'' என்பான்.

அண்ணனின் ஒட்டல் சிறியது. நான்கு கீற்றுகளில் அடங்கும் பகுதி. கேஸ் பலகையில் செய்யப்பட்ட மேசையும் பெஞ்சும். ஒரே சமயத்தில், ஆறுபேர் உட்காரலாம். ஒரு சின்ன மண்மேடையில் தகரத் தடுப்புகளை ஏற்படுத்தி, கனன்று கொண்டிருக்கும் கும்பா, சின்ன ஸ்டவ்வில் பால், அதைவிட சின்ன ஸ்டவ்வில் டிக்காஷன் என்று அழகாய் வைத்திருப்பார். எறும்புகள் ஓடாத சர்க்கரை, ஈக்கள் பறக்காத டீ கிளாஸ்கள் என்று சுத்தமோ சுத்தமாக இருக்கும். காலையில் இட்லியும், பூரியும், மசால் வடையும்; மதியம்

தயிர் சாதமும் எலுமிச்சை சாதமும். மணிதான் 'லெமன் ரைஸ் தயார்' என்றும் அதன்மேலே 'டிபன் ரெடி' என்று ஆச்சரியக் குறியோடு வாசகமும் ஒரு தகர போர்டில் பெயிண்ட் பண்ணிக் கொடுத்தான். இரவில் தோசையும் சப்பாத்தியும்.

படைக்கப்படுவன அமிர்தமாக இருக்கும். குறைந்த செலவில் சுவையும் அதைவிட அன்பும்.

ஜக்கம்மாவின் பூர்வீகம்பற்றி எங்களால் அறிந்து கொள்ளவே இயலவில்லை. ஒருநாள் கேட்டால், 'சுல்தான் பேட்ட...' என்று சொல்லுவாள். இன்னொரு தடவை கேட்டால், 'மொரட்டாண்டி...' என்று சொல்லுவாள். இது வரை ஏழெட்டு ஊர்களைச் சொல்லியிருப்பாள்! தோழர் ராமையா, ''சுல்தான்பேட்ட ஜக்கம்மா...'' என்று விளிப் பார். அவரைப் பார்த்து...

''உம்ம்மா...!'' என்று ஒரு குரல் கொடுத்துவிட்டு வேலையைத் தொடர்வாள்.

அண்ணன் எங்களிடம் சொல்லுவார் : ''இந்தப் பொம் பள வந்ததும் வியாபாரம் கொஞ்சம் தூக்கலாதா இருக்கு. முஞ்சில ஒரு லட்சுமி கடாச்சம்...!'' எல்லையில்லா ஆனந் தம் அவரது முகத்தில்.

''இதுக்கு மட்டும் மூளை நல்லாருந்திச்சினா, எங் கேயோ இருக்கணும்...'' என்று பரிதாபப்படுவார்.

எங்களுக்கு ஞாயிற்றுக்கிழமை என்றால் மகிழ்ச்சி அலை புரண்டோடும். அன்று இயன்றவரை அண்ணனையும் ஜக்கம்மாவையும் பார்த்துக் கொண்டிருக்கலாம். காலையில் இரண்டு மணி நேரம். மதியம் முதல் மாலை டீ வரை. அதன் பிறகு, ஜானியும் மணியும் முருகா தியேட்டருக்கு ஆஜராகி விடுவார்கள். அவர்களுக்கு ஞாயிற்றுக் கிழமை ஒரு படம் பார்த்துவிட வேண்டும். தோழர் ராமையா, ''தோ வரேன்...'' என்று போவார். வரும்போது 'சிங்கம் ஒயின்ஸ்' போயிருந்தது போதை வீச்சத்தில் தெரியும்.

"என்ன தோழரே! சிங்கம் ஒயின்ஸா...?" என்பேன்.

"இல்ல...நரி ஒயின் ஷாப்...!" என்று ஜோக்கடிப்பார்.

அனேகமாய் எனக்கு ஞாயிறு மாலை வேளைகளில் மனைவிக்கு கடிதம் எழுத வேண்டும். 'அன்புள்ள வத்சலா, டிரான்ஸ்பர் இன்னும் ஒரிரு மாதங்களில் கிடைத்து விடும்' என்று சுமார் இரண்டு வருடங்களாக எழுதிக் கொண்டிருக்கிறேன். பிறகு, பத்து மணிக்கு அனைவரும் அண்ணன் கடையில் கூடுவோம். தோழர் ராமையாவுக்கு மட்டும் ஞாயிறு இரவுகளில் அண்ணனிடம் சாப்பாடு கிடையாது. ஒயின் ஷாப்பிலேயே வான்கோழி பிரியாணியை உண்டு முடித்திருப்பார். இருப்பினும் உடன் வருவார்.

அந்த நேரத்தில் அண்ணன் எங்கள் எல்லோரது குடும்பம் பற்றியும்; கடிதங்கள்வருதல் பற்றியும்; டிரான்ஸ்பர் பற்றியும்; மணி, ஜானியிடம் சினிமாவைப் பற்றியும் கேட்பார். எங்களோடு மூலையில் ஜக்கம்மாவும் கலைத்துக் கொண்டு சாப்பிடுவாள். "போட்டுக்க, போட்டுக்க..." என்று அண்ணன் அன்பாய் உபசரிப்பார். அப்பொழுது, அவள் கண்கள் மகிழ்ச்சியில் மிளிரும். கண்ணீர் பொத்துக் கொண்டு வந்துவிடுவதைப் போல இருக்கும்.

அண்ணனின் குடும்பம் வளவனூரில் இருக்கிறதாம். பத்து வயதுக்குள் இரு பெண் குழந்தைகளாம். தோழர் ராமையாதான் ஒரு முறை எங்களிடம் சொன்னார். அண்ணனின் மனைவி அவரையும் குழந்தைகளையும் விட்டுவிட்டு ஓடிப்போய் விட்டாளாம். குழந்தைகள் இப்போது வளவனூர் ஆயா வீட்டில்தான். எங்களுக்கு ஆச்சரியமாயும் அதிர்ச்சியாயும் இருந்தது. அண்ணனை விட்டு ஓடிய அவள் மனுஷியே இல்லை. அண்ணன், திடீரென்று மதிய இடை வேளையில் ஊருக்குப்போய் குழந்தைகளைப் பார்த்துவிட்டு வருவார். அவரது முகத்தின் வாயிலாக சோகத்தையோ இழப்பையோ பார்க்கஇயலாது. புன்சிரிப்பு மறைத்துவிடும்.

மே தினம். முக்கால் அழுதுகொண்டு எங்களுக்கு விடு முறை கொடுத்தார்கள். சனிக்கிழமை. மறுநாள் வழக்க விடுமுறை. விடியற்காலை ஐந்து மணிக்கெல்லாம் டீ குடிக்க, அண்ணனை எழுப்பி விட்டோம். ஜக்கம்மா திடீரென்று சாணநீர் கொண்டு வந்து, கடையின்முன் தெளித்து...பிறகு பெருக்கி, ஆறேழு புள்ளிகள் வைத்து, அப்படி இப்படி இழுத்து ஏதோ கோலம் போட்டாள். அதை இரண்டு நிமிஷம் நின்று ரசித்தாள். பிறகு, தனது வழக்கமான பாத்திரம் தேய்த்தலில் ஈடுபட்டாள்.

மணி, அவனது கழுத்தைக் காட்டினான். ஒற்றை நூல் பருமனில் மஞ்சளாய் ஒரு கயிறு கிடந்தது. நேற்று கதிர்காமத்தில் செடில். யாரோ ஒரு பக்தர் கொடுத்திருக்க வேண்டும். தோழர் ராமையாவும் அதைப் பார்த்தார்.

''இன்னா ஜக்கம்மா...?'' என்றார்.

அவள் திரும்பி, அவரைப் பார்த்தாள்.

''இன்னா தாலிலாம் கட்டிக்னு இருக்குற? யாரு கட்டுனது...?" என்று கேட்டார். அவள் சட்டென்று, அண் ணனை நோக்கிக் கை காட்டினாள்.

நாங்கள் குடிசை அதிர சிரித்தோம். அண்ணனும் சேர்ந்து கொண்டார். ஜக்கம்மாவும் பிறகு புரியாமல் தானும் சிரித்தாள். அன்றைய பொழுது மிக நல்லதாய் அமையும் என்று நான் சந்தோஷித்தேன்.

காலை பத்து மணியிருக்கும். நான், தோழர் ராமையா, மணி மூவரும் ஆடுபுலி ஆட்டம் விளையாடிக் கொண்டிருந் தோம். புலி முன்னேறிக் கொண்டிருந்தபோது, ஜானி அவசரமாய்க் கதவைத் திறந்தபடி உள்ளே நுழைந்தான்.

''நம்ப அண்ணன் நெஞ்சு வலில போய்ட்டாரு...'' என்று தேம்பித் தேம்பி சிறு குழந்தைபோல அழுதான். எனக்குள் ஏதோ செய்தது. உடனிருந்தவர்கள் பதறிப்போய்

விட்டனர். கைலியைத் தூக்கிக் கட்டிக்கொண்டு அரக்கப் பரக்க ஓடினோம்.

ஓட்டலில், அண்ணன் ஒரு பெஞ்சுமேல் கிடத்தப் பட்டிருக்க, நாலைந்து மனிதர்கள் கைகட்டி நின்றிருந்தார்கள். எங்களுக்கு நம்பவே முடியவில்லை. எனக்கு அண்ணன் திடீரென்று எழுந்து வந்து, ''டீ போடட்டுங்களா, கணேசன்...?'' என்று புன்சிரிப்போடு கேட்க மாட்டாரா என்றிருந்தது. கண்களைச் சுழல விட்டேன். ஜக்கம்மா ஏதும் அறியாதவள்போல கடைசிப் பாத்திரமாக எலுமிச்சை சாதமிருந்த வட்டாவை பச்சை கலந்த மஞ்சள் நிறத்தோடு சாம்பல் சேர தேய்த்து விளக்கிக் கொண்டிருந்தாள். நாங்கள் மேற்கொண்டு ஆகவேண்டியதற்காகச் செயல்படத் துவங்கினோம்.

மறுநாள், அதற்கு அப்புறம் எங்கு தேடியும் ஜக்கம்மாவை காணமுடியவில்லை. ●

## சில
## உண்மைகள்
○

ஆம்பூர் சாலை ஹிக்கின்பாதம்ஸ் கடைக்கு எதிரில் ஐந்து விரல்களும் பதிய ராஜசேகரனை அறைந்தது என்னுள் உணரப்பட்டது. விட்ட அடியில், ஸூவேகாவை போட்டுவிட்டு மல் லாக்கச் சரிந்தான் அவன். குடித்திருந்த போதைகூட அவனுக்குத் தெளிந்துவிட்டது. நிச்சயம் வெறியில் திருப்பித் தாக்குவான் என்று நான் தடுப்பதற்குத் தயாராயிருந்தேன். சிறு கும்பலே கூடிவிட்டது. பக்கத்து போட்டோ ஸ்டுடியோவின் போட்டோகிராபர் கதிரேசன் உதவிக்கு ஓடி வந்தான். ''என்ன ஸார் ஆச்சு?'' என்றான்.

எனக்கு ஒன்றும் கூற இயலா நிலை. ராஜ சேகரன், தடுமாறி எழுந்தான். கண்கள் சிவந் திருந்தன. மேலே பட்டிருந்த அழுக்கைத் துடைத்து தோற்றுப்போனான். கலங்கிப்போய் உடைந்த குரலில், ''நான் வரேம்ப்பா...!" என்று என்னிடமே கூறிவிட்டு, இன்னும் அணைந்து போகா வாகனத்தை நேராக்கி, அமர்ந்து போயே போனான்.

மக்களோ என்னைத்தான் தப்பிதமாகப் பார்த்தனர். ''என்ன ஸார் ஆச்சு? எதுக்காக அவரைஅடிச்சீங்க...?''என்றபோது, ''ஒண்ணு

யில்லை. பர்ஸனல் விஷயம்'' என்று ஸ்டுடியோவிற்குள் நுழைந்து விட்டேன். கதிரேசன் துடைக்கும் பொருட்டு வைத்திருந்த கேமராவை டேபிள் மீது போட்டுவிட்டு வந்தான். கேட்டான் :

''உங்களுக்கு ஒண்ணும் அடியில்லையே? டேய், சார்லஸ்! ஸாருக்குத் தண்ணீ கொண்டா...''

அவனும் காரணம் கேட்டான்.

''நான் கொஞ்சம் அமைதியாயிருக்கணும் கதிரேசு...!'' என்று விலகப் பார்த்தேன்.

''என்னவாயிருந்தாலும், உங்க டியரெஸ்ட் பிரண்டை இப்படி நடுரோட்ல...''

''ஸாரி கதிரேசு! கொஞ்சம் சும்மாயிருக்கியா?'' நான் தலையை இரு உள்ளங்கைகளுக்கும் கொடுக்க, நாசூக்காய் நகர்ந்து போனான்.

சுமார் எட்டு வருடங்களுக்கு முன் நடந்து முடிந்து மறந்து போயிருந்த இந்நிகழ்ச்சி இன்று எண்ணத்தில் பறக்க ஆரம்பித்து விட்டது. காலையில் ராஜசேகரனை எதிர்பாராமல் சந்திக்க நேர்ந்து விட்டது.

குயவர்பாளையம் 'புள்ளி விவர அலுவலகம்'. 'உங்களுக்காக' ஊழியரிடம், ''நான் ஹரிதாஸ். 'கிராமத்தின் கல்வி முன்னேற்றம்' என்ற தலைப்பில் பி.எச்.டி. பன்றேன். அதனால், சில விவரங்கள் எனக்கு வேண்டும். குறிப்பா, பாகூர் கிராமம் பற்றிய விவரங்கள் வேண்டும், ப்ளீஸ்...!''

''ஓ.கே. ஷ்யூர்! இப்படியே போய் லெப்ட்லே திரும்பினீங்கன்னா ராஜசேகரன்னு ஒரு நியூஸ் கலெக்டர் இருப்பார். அவர்கிட்டேருந்து பெற்றுக் கொள்ளலாம்...ஸார்!''

அந்த ராஜசேகரன், என் நண்பன்-என்னிடம் அறை வாங்கிய நண்பன்-ராஜசேகரனாக இருந்தான்.

நெடுநாள் பிரிந்திருந்ததின் விளைவு, சட்டென்று இருவரும் புன்னகைத்து விட்டோம். பிறகுதான் அச்சம்பவங்கள் ஞாபகச் செல்லுக்குள் அணி வகுத்தன.

இருவரது நிலையும் இருதலைக் கொள்ளி எறும்புகள் தான். தலையை அரிக்கின்றது என கொள்ளிக் கட்டையால் சொறியப் போன கதை!

மேற்கொண்டு என்ன செய்வது என்று இருவருக்கும் குழப்பம். ஆனால், அவன் சுதாரித்துக் கொண்டான்.

''ஹாய்...ஹரி!'' என்று எழுந்து வந்து என் இரு கைகளையும் அழுந்தப் பிடித்துக்கொண்டான்.

''எப்படியிருக்கே...ராஜா?''

''நல்லாருக்கேன். நீ...?''

''பைன்...!''—கடினமாய்ச் சிரித்தேன்.

''வா...வா...'' என்று கேன்டீனுக்கு அழைத்துப் போனான். எட்டு வருடங்களுக்குமுன் அச்சம்பவம் நடக்காதது போல் நடந்து கொண்டான். 'ஐயையோ! இது என்ன தர்ம சங்கடம்' என்று என்னால் நெளிய மட்டுமே முடிந்தது.

காபி, போண்டாவிற்கு ஆர்டர் சொல்லிவிட்டு, சில வினாடிகள் என்னையே உற்றுப் பார்த்தான். ஆள் ரொம்பவும் மாறிப் போயிருந்தான். முன்பு, குடித்துக் குடித்து 'டல்லாய்' கண் சிவந்து—கன்னம் ஒட்டிப்போய்க் காணப்படுவான். இதோ இப்பொழுது அருவி போன்று தெளிவு. திடீரென்று என்னைக் கேட்டான்:

''நம்ம தொடர்பு விட்டுப்போய் ஏழெட்டு வருஷம் இருக்குமா, ஹரி...?''

''ஆமாம்...!''

''அந்த மே மாதம் ஐந்தாம் தேதியை நான் இன்னும் மறக்கலை, ஹரி...!''

நான், அவனை அடித்து வீதியில் தள்ளிய நாள்.

''ப்ச்...!'' என்றேன்.

அவன் என்னைப் பார்க்க, சர்வர் சூடான போண்டா வுடன் வந்தார். வைத்துவிட்டுப் போனார். நான் கூறி னேன்:

''ராஜன், அன்னிக்கு நீ அப்படி நடந்திருக்கக் கூடாது. சத்யமா சொல்றேன், எனக்கு இன்னும் அந்த சம்பவத்து ஆத்திரம் வேதனையெல்லாம் தீரலை தெரியுமா...?''

''அதெல்லாம் நேரம்டா. கெட்ட நேரம்னு உனக்குத் தோணலாம். பட், அன்றைய நாள்தான் எனக்கு அது நல்ல நாள் தெரியுமா? நான் பிறந்த நாள் கொண்டாட மறந்தா லும், அந்த நாளைக் கொண்டாட மறக்கலை....!''

வியப்புடனும் கேள்விக்குறியுடனும் நோக்கினேன்.

''எஸ். தட்ஸ் மை மெர்ரி டே....! அன்று மட்டும்தான் நான் கடைசியா உளறினேன். அன்று மட்டும்தான் நான் கடைசியா குடிச்சது. மறுநாள் முதல் நான் தனிமனித னாக, தெளிவு பெற்றவனாக ஆனேன். உண்மையா சொல் றேன். உன்னை நான் இன்னும் தெய்வமா உணர்கிறேன், ஐ லைக் யூ...டு மச்...!''

''நீ சொல்றது எனக்கு முழுசும் புரியலை, ராஜன்!'' மெல்ல சாப்பிட ஆரம்பித்தேன். அவனும் சாப்பிட்டான். பிறகு சொன்னான்:

''அன்னைக்கு நீ என்னை நடுரோட்டில தள்ளி அடிச்சி ருக்காட்டா, நான் இந்த நிலையில இருந்திட்டிருக்க மாட் டேன். அன்றே அந்தத் தவறுக்கான காரணம் உணர்ந்தேன். அந்தக் குடிதான் காரணம்னு பூர்ணமா உணர்ந்தேன்.

விட்டுப்போன பேப்பர்களை முடித்து 'டிகிரி' வாங்கினேன். அப்புறம் வேலை—பதவி மாற்றம்—ஊர் மாற்றம்னு முன் னேறி, இதோ... இப்போ மாசம் மூவாயிரம் ரூபாய் கை நிறைய சம்பாதிக்கிறேன்...!''

காப்பி வந்தது. எனக்கொரு கோப்பையைத் தானே கையிலெடுத்துக் கொடுத்தான். பின் பழையனவற்றை நினைவு கூர்ந்தான். ஒன்றாய்ப் பள்ளியில் காலடியெடுத்து வைத்தது, கல்லூரியில் பிரிந்து படித்தபோது அவன் சிகரெட்டிலிருந்து மற்ற தீயபழக்கங்களுக்கு அடிமையானது, எங்கள் வீட்டுத் தோட்டத்தில் அபூர்வமாய் விளைந்த நேந்திர வாழையைச் சுற்றி ஓடியது என்று பளபளவென்று அவனுக் குள்ளேயிருந்து கொட்டிக்கொண்டு இருந்தான். அப்புறம், அலுவலகம் வந்து எனக்குத் தேவைப்பட்ட விவரங்களை அபரிமிதமாகவே அளித்தான். தனது முகவரியைக் கொடுத்தான்.

''சங்கரியை வந்து பாருடா! அவள் ரொம்பவும் சந் தோஷப்படுவாள்...!'' என்றான். என் ஸ்கூட்டரின் கிக் ஸ்டார்ட்டரை தானே உதைத்துக் கொடுத்துவிட்டுக் கேட்டான்:

''வத்சலாவுக்கு கல்யாணம் ஆயிடுச்சு இல்லை...?''

''மூணு வயசுல ஒரு பையன் இருக்கான்'', என்றேன்.

''இஸிட்...?''—அவன் பூவாய்ச் சிரித்து, என்னை வழி யனுப்பி வைத்தான். ஏனோ தெரியவில்லை. எனக்கு ஏழெட்டு வருடங்களாக இல்லாத மனநிறைவு இப்பொழுது ஏற்பட்டது போன்ற உணர்வு.

சாலையின் விளக்குக் கம்பங்களிலெல்லாம் நண்பன் ராஜ சேகரன் தெரிந்தான்.

வீட்டின் எனது தனியறை. மனது 'தீஸிஸில்' ஓட வில்லை. பாய்ந்து அலையாய் மறுபடி மறுபடி அச் சம்பவமே

மனதிற்குள் பிரவாகமெடுத்தது. மிகச் சாதாரணமாகத்தான் அது ஆரம்பமானது.

அந்த மே, ஐந்தாம் தேதி. காலை ஒன்பது மணியளவில் ராஜசேகரனை பெரியக்கடை போலீஸ் ஸ்டேஷன் அருகில் வைத்துப் பார்த்தேன். வழக்கமான 'ஜானி வாக்கர்' வாசம்.

''ஹாய்...பிரெண்ட்...!'' என்று ஸ்கூட்டரை சீராக்கி, இறங்கினான்.

''ஏண்டா, ஒன்பது மணிக்கெல்லாம் தீர்த்தம் போட்டாச்சா? திருத்தவே முடியாதுடா உங்களை...'' —நான்.

''இதோ பாரு. இந்த வண்டிக்கு பெட்ரோல் போடாம ஓட்டிக்க முடியுமா? அதே மாதிரிதான் ஐயாவுக்கும்... ஹெக்...!''

''சரி, சரி. வண்டியை மெல்ல ஓட்டிகிட்டு வா. கதிரேசனை போட்டோ ஸ்டுடியோவிலே பார்த்துட்டு வந்துருவம்...!''

''எதுக்...?'' என்றவனிடம்,

''தங்கச்சி 'ரிப்பப்ளிக் டேவில' க்ருப் டான்ஸ் ஆடின போட்டோக்களை வாங்கிகிட்டு வரணும்'', என்றேன்.

''அட, வத்சலாவோட போட்டோ? இப்ப என்ன செஞ்சுட்டிருக்கா அவ...?''

''இவருக்கு குடிச்சுட்டா உலகமே மறந்துடும். பாரதி தாசன்ல பி.காம். லாஸ்ட் இயர். ஞாபகத்துக்கு வருது இல்லையோ?''

''ஆஹ்! வந்துருச்சு, மனசுலாயி...'' என்றான். நேரு வீதி முடிவில், வலது பக்கமாய்த் திரும்பினோம். ஐந்து கடைகள் தள்ளி போட்டோ ஸ்டுடியோ.

ராஜசேகரன் ஒரு கையால் வண்டியைச் செலுத்திக் கொண்டு, என்னிடம் தொட்டுக் கூறினான்: ''வத்சலா ரொம்ப அழகில்லே...?''

''ஆமா, இப்ப என்ன அதுக்கு?''

ஸ்டுடியோவை நெருங்கியபோது, அவன் மறுபடியும் என்னைத் தொட்டு...

''நல்லா தளதளன்னு இருப்பா. ஒரு நாளைக்கு எனக்கு அவளை அனுப்பழியா...?''

அவன் இவ்வாறு கேட்டதுதான் தாமதம். சடார் ரென்று எனக்குள் ஒன்று வெடித்தது. பதினெட்டு வருட நட்பை கசக்கச் செய்தது. கைகள் தானாக மேலெழும்பி காலரைப் பிடித்து, ஓங்கி ஓர் அறை!

அந்த சம்பவத்தை நினைத்தால் நடுக்கமே வருகிறது. பலநாள் நட்பை சிதைக்க நேர்ந்த சம்பவம்.

இன்று, எட்டு வருடங்கள் கழிந்து ராஜசேகரனைச் சந்தித்தது; அவன் எல்லாம் மறந்து பெருமிதமாய் ஏற்றுக் கொண்டது; 'தீஸிஸிற்கான' விவரங்களை அன்புடன் அளித்தது; முகவரியினைக் கொடுத்தது; வத்சலாவின் திருமணம் பற்றி விசாரித்தது; உபசரித்தது...எல்லாமே பிரம்மையாய் இருக்கிறது. அதே சமயம் வெட்கமும் ஏற்பட்டது,

அவனை அடித்திருக்கக் கூடாதோ? அடித்திராவிட்டால் என்றாவது இதே குடிபோதையில் வத்சலாவைப் பற்றிக் கேட்கும் எண்ணம் வந்திருக்குமோ? சத்யமாய் உருவாகி யிருக்கும். சூழ்நிலை என்பது மாறாத ஒன்று. எனக்குள் ஒன்று கோடியிட்டது! பளீரென்று வெள்ளியாய் மின்னலடித்து ஓர் உண்மை வெளிப்பட்டது!

'ராஜன், தவறு உன்னிடம் மட்டுமல்ல; என்னிடமும் இருக்கிறது. பதினெட்டு வருடங்களின் ஸ்னேகம் நம்மை அந்தரங்கமாய் பேச வைத்தது, படிக்கும்பொழுது உடன்

படித்த சகதோழிகளைக் 'கமெண்ட்' அடிக்க அதுவே காரண மானது. நாம் ஆழமாய் மூன்றாவது 'பெஞ்ச்' திலகாவைப் பற்றியும் அவளது தாவணி விலகலையும்—பளபளப்பையும், வயசுக்கு வருவதின் காரணத்தையும் அர்த்தத்தையும் மூர்த்தி யிடம் கேட்டு மயங்கி நின்றதும்—அந்த ரீ-பெயிண்ட் அடித்த 'லொடலொடா' சைக்கிளில் ஊரையே ரவுண்ட் அடித்து சாலையோரப் பெண்களை வருணித்ததும்; பார்த்த 'அடல்ஸ் ஒன்லி' திரைப்படங்களை பகிர்ந்ததும்... படித்த புத்தகங் களை அலசியதும்...

'ஓ, இயற்கையின் இருட்டுக்களை இப்படி வெளிச்சமிட் டது எவ்வளவு தூரத்திற்கு கொண்டு வந்து விட்டது? காலம் காலமாய் பூஜிக்கப்பட வேண்டிய உண்மைகளை கொச்சைப் படுத்தியதால்தானே இந்நிலை உருவானது?' ராஜன், நாம் இருவரும் ஓர் உண்மையான நட்பின் எல்லையைத் தொடாது பாழாக்கிக் கொண்டோம். இன்று எனது வீட்டினருகில் குடி வந்திருக்கும் சந்தோஷ் என்ற மாணவனைப் பார்க்கிறேன்.

அன்று சாலையில் தன் நண்பனுடன் இலக்கியம் பற்றி பேசிக்கொண்டு சென்றான். கதைகளும் கட்டுரை களும் எழுதி, பத்திரிக்கைகளுக்கு அனுப்புகிறான். அவை வெளிவரும்பொழுது என்னிடம் காட்டுவதற்கு ஓடிவரு கிறான். நம்மைப் போல் கருப்பு-வெள்ளை போஸ்டர்களைப் பார்த்துவிட்டு படம் பார்க்க போவதில்லை. சிறந்த படங் களாக, விருது பெற்ற படங்களாக பார்ப்பதை வழக்கமாகக் கொண்டிருக்கிறான். அவற்றை அழகாக விமர்சனம் செய் கிறான். தலைமுறைகள் இவ்வளவு சீக்கிரம் நம்மைப்போல் அழிந்து போக இயலாமல், வாழ்ந்து கொண்டுதான் இருக் கிறது ராஜன். நாம்தான் குருட்டுப் பாதையில் அடியெடுத்து வைத்து விட்டோம்.

உன்னை அவ்வாறு கேட்க வைத்தது எது? உனக்குள் ஒரு தூண்டுகோலை உருவாக்கித் தந்தது எது? இரண்டே யிரண்டு எழுத்துக்கள்தான்!

போதை...!

இந்த எழுத்துக்களை சந்தோஷ் போன்ற தலைமுறைகளால் அழித்துவிட முடியும். காமம் என்பது தெய்வீகமானது என்பது நிரூபிக்கப்பட்டுவிடும்.

நம் இழப்புகள் நம்மோடு போகட்டும். சில இழப்புகள் தாம் பல வெற்றிகளைத் தேடித் தரும். நமக்குப் பிறகு வரும் நம் சொந்தங்களையாவது அறிவாக, ஒளியாக இந்த உலகில் நடமாட வைக்க வேண்டும்.

அப்பொழுதுதான் உலக உண்மைகள் இழிவின் வழியிலிருந்து காப்பாற்றப்படும்.

நாளை அவனைச் சென்று சந்திக்க வேண்டும். ●

புத்தகப் பூங்கா
ஜூன் 1990

## வழக்கம்



வத்சலாவின் பாத்திரம் தேய்க்கும் தொனி இன்று வழக்கம் போலில்லை. 'டர்...டமார்' என்று வேண்டாத உடைப்பொலிகள் மிகுந்து வந்தன. உள்ளே ஸோபியாக் குட்டி சிணுங்க ஆரம்பித்தது.

''முழிச்சுக்கிட்டியா? இந்த பாழடைஞ்ச வீட்டில என்ன சுகத்தைக் கண்டேன்? இந்த ஊது சத்தத் தைத் தவிர...!'' —ஒரு அலுமினியக் குண்டு கறுத்த புட்டத்தோடு உருண்டு ஓடியது.

''இப்ப வந்து பல்ல உடைப்பேன்! இன்னாத் துக்கு சத்தம் போட்டுக்னு இருக்க? குழந்த அழுவுது... போய்த் தூக்குடி...!'' ரங்கராஜன் கத்தியபடி பழைய வாரப் பத்திரிகையைத் தூக்கியெறிந்தான். தாத்தா கட்டில் 'டொம்' என்றது.

''ஐயா பூப்பறிச்சுக்னு இருக்கீங்களோ? போய்த் தூக்குறது...!''

''இன்னைக்கு உதைபடாம போமாட்ட போலிருக்கு...!''

ஸோபியாக் குட்டி தன் குரலை உயர்த்திக் கொண்டிருந்தது படக்கென்று எழுந்த வத்சலா, வாளித் தண்ணீரில் கையைவிட்டு

எடுத்து முந்தானையில் ஈரம் போகத் துடைத்துக் கொண் டான்.

''மோரையைப் பாரு...!'' என்றான்.

குழந்தை அவளது கைபட்டவுடன் அழுகையை மறந்து சிரித்தது. முந்தானை விலக்கப் பார்த்தது. வத்சலா அணைத்துக் கொண்டாள். அவனைப் பார்த்து.

''ஏன் துரை யாரையாவது கிளியோபாட்ராவைக் கட்டிக்னு இருந்திருக்குறதுதானே...?'' என்றாள்.

அவன் இந்த வார்த்தைகளுக்கு மௌனம் சாதித்து, அடுத்து 'எப்போது மாட்டுவாள்' என்று தருணம் காத்திருந் தான்.

''கட்டும்போது எங்க போச்சு, புத்தி...?'' என்று அவள் தொடர்ந்தபோது, முழுக்கோபம் வெளிப்பட, ''இப்ப வாங்கப் போற...!'' என்று கத்தினான். இரவுப் பொழுது அவன் குரலை எதிரொலித்தது. 'பக்கத்து வீட்டிற்கு சத்தம் கேட்டிருக்கும்' என்று எண்ணினான்.

அவள் திடீரென்று மூக்கை உறிஞ்சியபடி அழுதாள். குழந்தை ஒருமுறை தலையை வெளியே இழுத்து அவனைப் பார்த்துவிட்டு, மறுபடி உள்ளே நுழைத்துக் கொண்டது.

''ஒரேடியா கொன்னுடுங்க, நிம்மதியாப் போய்ச் சேந்துடறேன்...!''

அவளது திடீர் அழுகையைக் கண்டவன், வியந்தான். 'எப்படி இவளால் நொடியில் அழுதுவிட முடிகிறது...!' என்று யோசித்தான். அழும்போது அவளைப் பார்க்க பாவமாய்த் தான் இருந்தது. தான் மேற்கொண்டு ஏதும் பேசாமல் இருந் தான். 'ஏசியது அதிகம்தான்' என்று நினைத்தான். அவனுக்கு இரு கெண்டைக்கால்களும் முட்கள் தைத்தது போல வலித்தன. அலுவலகம் பற்றி சிந்தனை ஓடியது.

காலை. 'ஆ...ஊ' என்று எட்டரை மணிக்கு அலுவலகம் ஓடி, மானேஜர், சூப்பரின்டெண்ட், அக்கவுன்டண்ட், டைப் பிஸ்ட் முதலியோரின் மேசை, நாற்காலிகளை, தள்ளுக் கதவை, லொடலொட டைப்ரைட்டரை, வருடத்தில் ஆறு மாதக் காலம் 'எங்கேஜ்டாக' இருக்கும் மூன்று இராஜபுத்திர தொலைபேசிகளை என்று அனைத்து அஃறிணைப் பொருள் களையும் துடைத்து சுத்தம் செய்தல் வேண்டும். வெண்துணி கருமையாகும். கூட்டிப் பெருக்க வேண்டும் வறுமையைப் போலவே தொன்றுதொட்டு அசுத்தங்களும் செழிப்பாக வளர்ந்து வருகின்றன.

பிறகு, அவரவர் இடத்தில் குடிநீர், கண்ணாடி டம்ளர் களைக் கவிழ்த்து வைக்க வேண்டும். தூசிகளின் கைங்கர்யம், காலையிலேயே பத்துப் பதினைந்து தும்பல்கள் வரும். இது நாள் வரை தன் முக்காலியை அவன் துடைத்துக்கொள்ள நினைத்ததில்லை. அவசியமும் இல்லை.

ஒன்பதரை, பத்துக்கு பெரிய மனிதர்கள் வருவார்கள். வரிசையாக வேலையிட ஆரம்பித்துவிடுவார்கள். ஆரம்பத் தில், 'வீட்டுத் தண்ணீர் பில் கட்ட முடியுமா?' என்றவர்கள், இப்போது 'கட்டிவிட்டு வா...' என்கிறார்கள். களைத்துவிட் டது போல டீ, காபி வாங்கி வரச் சொல்லி கடகடவென்று ஊற்றிக் கொள்வார்கள். டீ, காபிக்கு அனைவரிடமும் காசு வாங்குவதற்குள் ஒரு வானவில்லைக் கடத்திவிடலாம். அவ்வளவு கடினம். மானேஜரிடமும் சூப்பரின்டெண்டிடமும் மணி இருக்கிறது. மாற்றி மாற்றி அழுத்துவார்கள்.

''அந்த ஃபைல்...!''

''ராமனாதனைக் கூப்பிடு...!''

''ரப்பர்பேன்ட்...!''

''இங்க்ரொப்பு ..!'' என்று வேலை...வேலை...வேலை... இல்லை, கட்டளைகள். கடைநிலை ஊழியன் என்ற மனிதன்,

அந்த நிலையையும் மீறி, தங்களுக்கென்றே உருவானவன் என்ற எண்ணம்.

டைப்ரைட்டரின் ஓசை பதினொன்றுக்கு அடங்கிவிடும். யு.டி.சி. மரியோஜான் பிரிட்டோவுடன் டைப்பிஸ்ட் காதல் செய்ய, காண்டீன் பக்கம் போய்விடுவாள். அக்கவுன்டண்ட் கொட்டாவிகளைக் குத்தகைக்கு எடுத்துக்கொள்வார். சம்பந்தமே இல்லாது 'மனிதனாக இரு' என்ற ஏதாவது கட்டுரைப் புத்தகம் படித்துக் கொண்டிருப்பார். நாலைந்து கிளார்க்குகள் 'செக்ஸி ஸெவன்' சினிமா சரியில்லையென்றும் மார்க்கெட்டில் நேற்று இடித்த ஃபிகரினால் ஏற்பட்ட அனுபவத்தையும் மச்சினி வந்த கதைகளையும் பேசிக்கொண்டிருப்பார்கள்.

நடுநடுவே அவர்களுக்கு வேலை செய்யத் தோன்றும். ரங்கராஜனை 'ஸ்டாக் ரூம் போயி...' என்று தூசியே அட்டையாகிப் போன ஃபைலைக் கொண்டுவரச் சொல்லி, அலசிக்கொண்டிருப்பார்கள். மானேஜர் போன் பேசிக்கொண்டிருப்பார். அவர் அப்போது வித்தியாசமாக இருப்பார். 'ஹல்லோஒ...!' என்று ஆரம்பிப்பது இவனுக்கு சிரிப்பை வரவழைக்கும். போன் பேசியவுடன் இவனுக்கு ஏதாவது வெளி வேலை இருக்கும்.

முக்காலி சும்மா அவன் நிலைக்குத்தான் தரப்பட்டிருந்ததே தவிர, உட்கார இல்லை என்பது காலத்தின் அவசியம் போலிருக்கிறது.

மாதம் பிறந்தால் எல்லாம் போக கையில் தொள்ளாயிரம் மிஞ்சும். பதினைந்து நாளில் 'இன்னொரு தொள்ளாயிரம் இருந்தால் எப்படியிருக்கும்' என்று அவனுக்குத் தோன்றும் வீட்டுக்காரன் சின்ன எலிப்பொறிக்கு முந்நூற்று இருபது பிடுங்கிவிடுகிறான். பால்காரன். மளிகைக் கடைக்காரக் குன்னன் என்று பணம் கரையும். இஃதன்னியில், காய்கறி, ஸெரீலாக், ஜுரம் வந்தால் லஷ்மி டாக்டருக்கு, மருந்துக்

கடை கோபாலுக்கு என்று செலவுகள் 'கூ....ஜிகுஜிகு'வென்று ஒடும். சம்பளம் வாங்கிய பிரமைதான் மிஞ்சும். பிறகு, சக ஊழியர்களிடம் கை நீட்டினால் பத்து இருபது. சில சமயம் மறுப்புகள். முடிந்தவரை இங்கு வாங்கி, அங்கு கொடுக்கும் பழக்கம் இருந்ததால்தான் கடன் தரும் நெஞ்சங்களை இவன் நாட முடிந்தது. இதுவரை ஆசுவாசமாய் ஒரு கோல்டு பிளேக் பில்டர் அடிக்க முடிந்ததில்லை.

வத்சலா, குழந்தைக்கு தங்கக்காப்பு போட வேண்டும் என்று துடித்தபோதுதான் பிரச்சினை ஆரம்பமானது. அவள் அதனைப் பற்றி அவனிடம் சொன்னபொழுது, ''உங்கப்பனைப் போடச் சொல்லு...!" என்று கூறி, நிரந்தர முடிவு கொடுக்கப் பார்த்ததுதான் இத்தனை பெரிய ஆர்ப்பாட்டம்.

'அப்படிச் சொல்லியிருக்க வேண்டியதில்லை' என்று நினைத்தான். வத்சலாவும் பாவம்தான். இதுவரை ஒரு சுகமில்லை. நாள் பூராவும் உழைக்கிறாள். கவலைப்படுகிறாள். சொற்ப மளிகைச் சாமான்களை வைத்துக்கொண்டு வேறு எந்த கொம்பியாலும் குடும்பம் நடத்த முடியாது. அவளது கைபட்ட சாதாரண அரிசிச் சோறுகூட மணக்கும். துவைத்த துணிமணிகள் மின்னும். குழந்தை எப்போதும் பளீரென்றிருக்கும்.

அடித்துக் களைத்து இரவு பத்து மணிக்கு விழும்போது, ரங்கராஜனின் கைகள் அவள்மேல் விழும், மறுப்பு வராது. குடும்பத்தில் இதையும் ஒரு பணியாக விட்டுக் கொடுக்கிறாளோ என்று அவனுக்குத் தோன்றுவதைப் பொய்ப்பித்து விடுவாள். அப்படி அன்பைப் பொழிவாள்.

அவ்வப்பொழுது இயலாமை, கோபமாய் வெளிப்பட்டு விட சண்டையில் முடிகிறது.

குழந்தை பால் ஈரத்துடன் இவனைப் பார்த்துச் சிரித்தது.

"என்ட்ட குடு...!" என்றான்.

''ஒண்ணும் வேணாம். நானே பார்த்துக்கறேன். ஐயாவுக்கு அக்கறை பிச்சுக்னு வந்துடுச்சு போலிருக்கு...!''

குழந்தையைப் பிடுங்கிக் கொண்டான்.

''வா, வா...கண்ணு...டுட்டு...!" என்று அதன் கன்னத்தில் உதடுகளைப் பதித்தான். மீசை குத்தி, குழந்தை சிணுங்கியது. ஆசையாய் அதன் வாழைத்தண்டுக் கைகளையும் கால்களையும் தடவினான். குழந்தை சிரித்தது.

''காலைப் பாருங்க! பொட்டப் புள்ளைக்கு மொட்டையா தெரியுது...!"

''எனக்கும் ஆசையில்லையா? இருந்தாத்தானே போட முடியும்...?''

''அதுக்கு ஏன் எங்கப்பாவை இழுத்தீங்க?"

''கடனை ஒடனை வாங்கி, சின்னக் குட்டிக்கு காப்பு வாங்கிப் போடறேன். போட்டுட வேண்டியதுதா...!" என்று கிச்சிகிச்சு மூட்ட, குழந்தை வயிறு மேலெழும்பச் சிரித்தது. அவனது தோளில் வாயைப் பதித்து ஈறுகளால் கடித்தது.

இருள் சூழ்ந்த பகுதியிலிருந்து சுவர்க்கோழியின் கிக்க்கீ...வத்சலா பாத்திரங்களை அடுக்கி, சமையலறை விளக்கை நிறுத்தினாள். இருளிலிருந்து வெளிப்பட்டபோது மிகுந்த அழகுடன் மிளிர்ந்ததுபோல் உணர்ந்தான். கையில் பால் டம்ளர் இருந்தது. அவனை நெருங்கியவள் டம்ளரைக் கையில் கொடுக்காது 'டொக்'கென்று முக்காலி மேல் வைத்தாள்.

ரங்கராஜன், அவளை எட்டிப் பிடித்தான். கைகளை உதறப் பார்த்து தோற்றுப் போனாள். இழுத்து, பிடரியில்

முத்தமிட்டான். இடுப்பில் கையைப் போட்டு செல்லமாய்க் கிள்ளினான்.

''இதுல ஒண்ணும் குறைச்சல் இல்ல...!'' என்றவள், அவனது மீசையைப் பிடித்து வெடுக்கென்று இழுத்தாள்.

தினமணிக்கதிர்
மே, 1993

## தீவுகளின் சந்திப்பு

○

அப்பாவை வெகுநாளைக்குப் பிறகு கும்ப கோணத்தில் வைத்துப் பார்த்தேன். முதலில் பார்த்தபோது, 'அப்பாவா அது?' என்று எண்ணும்படி ஆயிற்று. உடம்பு லேசாக 'டொக்கு' விழுந்து போயிருந்தது. கண்ணாடி புதிய பிரேமில் இருந்தது. வெண்தாடி 'ஒரு வாரமாய் இருக்கிறேன்' என்றது. ஆனால், அந்த வெள்ளை வேட்டியும் சட்டையும், பழைய தோள்பையும் அப்பாவை சட்டென்று யாருக்கும் அடையாளம் காட்டும்!

''அப்பா...'' என்று அருகில் சென்று அழைக்க, சட்டென்று திரும்பினார். கண்ணாடி வழியாக கண்களால் நன்றாக ஊடுருவிப் பார்த்து...

''டேய் ரமணா!'' என்று என் கைகளை அழுந் தப் பிடித்துக்கொண்டார். ''சௌக்கியமா? வா, வா... ஓரமாபோய் பேசுவோம்!'' என்றார்

எங்களை—எங்கள் சம்பாஷணைகளை எல்லோ ரும் இரு புதிய ஜீவன்களைப் பார்ப்பதுபோல் பார்த்தனர். அருகிலிருந்த ஒட்டலுக்குள் நுழைந்தோம். ஆங்காங்கு இருவர் இருவராக அமர்ந்திருந்தனர். நானும் அப்பாவும் ஒரிடத் தில் அமர்ந்தோம்.

துப்புரவுப் பையன் நீண்ட கண்ணாடி தம்ளர் களில் தண்ணீர் வைத்தான். அப்பா அவனிடம்

வெந்நீருக்கு சொல்லியனுப்பினார். சர்வர் வந்தார் முழுநீள விபூதிப் பட்டையோடு.

''என்ன ரமணா சாப்பட்றே?''

''உனக்கு பிடிச்சத்தை சொல்லுப்பா!''

''பேப்பர் மசாலும் மெதுவடையும் கொண்டாப்பா!'' என்றார்.

'அப்பாவுக்கு இதுவா பிடித்தமானது?'

''சௌக்கியமா ரமணா?''

''இருக்கேன். நீ?''

''ம்...'' சிரித்துக் கொண்டார். இன்னும் ஒரு பல்கூட விழவில்லை.

''உன்னை இந்த ஊர்ல பார்ப்பேன்னு நினைக்கலைப்பா!'' என்றேன்.

''என்ன விஷயமா வந்தே?''—அப்பா கேட்டுவிட்டு, இடையில் வந்த வெந்நீரைப் பெற்றுக்கொண்டு சிறிது அருந்தினார்.

''இங்கே ஒரு மருந்துக் கம்பெனியில இன்டர்வியூ! அதுல சேல்ஸ் ரெப்ரஸண்டேட்டிவ் போஸ்டுக்கு ஒரு இடம் காலி. ஃப்ரெண்ட் ஒருத்தர் அப்ளை பண்ணச் சொன்னார்...''

''பாண்டிச்சேரியில் இருந்து இங்கே வந்து வேலை பார்த்து என்னத்தை சம்பாதிச்சு ஊருக்கு அனுப்ப முடியும்? அங்கேயே பார்த்துக்கறதுதானே?''

''பார்த்துக்கலாம்தான். பணம்? எல்லா வேலைக்கும் ஆயிரக் கணக்குல லஞ்சம் கேக்கறான். கவர்மெண்ட் போஸ்ட் சும்மா கிடைக்காதுன்னு ஆயிடுச்சு இப்போ! இந்த வேலைக்கே சிபாரிசு லெட்டர் வாங்கிட்டு வந்திருக்கேன். பணம் இருந்தா யார் இங்கே வரப் போறாங்க?''

என் பதிலும் கேள்வியும் அப்பாவைத் தாக்கியிருக்க வேண்டும். முகத்தை ஒரு மாதிரி வைத்துக்கொண்டு தூரப் பார்வை பார்த்தார்.

சர்வர் தோசைகளும், இரு கிண்ணங்களில் சாம்பாரும், சட்னியும் கொண்டு வந்தார். நான், அப்பாவிற்கு நகர்த்தி வைத்தேன். சாப்பிடத் தொடங்கினோம். அதற்குமேல் வேலை விஷயமாக யாரும் பேசிக்கொள்ளவில்லை.

''நீ எங்கேப்பா இந்த ஊருக்கு?'' என்றேன்.

''நம்ம முத்துராமுலு செட்டியார் பண விஷயமா அனுப்பிச்சார். பார்ட்டி கையை விரிச்சுடுச்சு!''

ஆம்! அப்பா, அம்மாவைத் தவிர மற்றவர்களுக்கு நல்லவர், நாணயம் உடையவர். அன்றிலிருந்தே இதே முத்துராமுலு செட்டியாரிடம்தான் கணக்குப்பிள்ளையாகவும் நிலத்துக்கு மேற்பார்வையாளராகவும் கூலியாட்களை அமைத்துக் கொடுக்க மக்கள் தொடர்பு கொண்டவராகவும் விளங்கினார்.

அப்பா அவர்களிடம் இருந்து பயன்பெற்றதைவிட, அவர்களே அதிகம் பயன் பெற்றதாகத் தோன்றும். அப்பாவின் திறமையில் அவர்களுக்கு அபரிமிதமான நம்பிக்கை. எல்லாவற்றுக்கும் அப்பா...அப்பா...அப்பா...!

''இன்னும் ஏதாவது சாப்பிடறியா?''

''வேண்டாம்ப்பா. உனக்கு வேணும்ன்னா காப்பி வாங்கிக்கோ!''

''காப்பியெல்லாம் குடிக்கிறதில்லை...'' என்று எழுந்தார்.

கை கழுவிவிட்டு வந்து உட்கார்ந்தோம். அப்பா கேட்டார்:

''ராமு ஒழுங்கா வேலைக்குப் போறானா? பர்மணன்ட் ஆயிடுச்சா?''

''இல்லை. அதே பகுதி நேர வேலைதான். போஸ்ட் மேன்னு ஊர் பூரா பேர். தர்றது நானூறுரூபா!'' என்றவன், பேச்சை மாற்றினேன், ''நம்ம ஊர் கதிர்காமம் முருகன் கோயில்ல உற்சவம்ப்பா. கோலாகலமா நடந்துச்சு. கூத்து, நாடகம், பாட்டுன்னு ஒரே அமர்க்களம் அஞ்சு நாளைக்கு. மூக்கோட்டையில ஏதாவது விசேஷம்..."

''முந்தனிநாள்கூட விசேஷம்தான். உறியடிகூட நடந்துச்சு. ஆமா, மகேஸ்வரி நல்லா இருக்காளா?" என்றார்.

''ம்... நமக்கு வாய்ச்ச மாப்பிள்ளை தங்கமானவர். பொங்கல், தீபாவளிக்கு நாங்க எதுவும் செஞ்சாலும், செய் யாட்டியும் பெருமிதமா நம்ம குடும்ப நிலைமை தெரிஞ்சு ஏத்துக்கறார்!''

அதன் பிறகு கொஞ்சமாக அரசியல்.

''காபியா சார்?"

''வேண்டாம் பில் கொண்டாப்பா!''

அப்பா, மெல்ல மெல்ல கண்ணாடி தம்ளரை நகர்த்தி வைத்துக்கொண்டிருந்தார். லேசாக ஒருமுறை உள்ளுக்குள் இருமினார். பிறகு கேட்டார்:

''அம்மா எப்படி இருக்கா?''

எனக்கு இந்த கேள்விக்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. அப்பாவுக்காக 'நல்லா இருக்கா!' என்று சொல்லலாம். ஆனால், அம்மாவைப் பற்றிக் கேட்கும் போது ஒருபுறத்தில் ஆத்திரம் வந்தது.

''என்ன உரிமை இருக்கு?'' என்று கேட்கலாம்போல் இருந்தது. 'அம்மாதான் உன்னைப்பத்தி எதுவும் பேச மாட்டேங்கறாளே! அப்புறம், நீ ஏன் கேக்கறே?' என்று ஒரு

புறத்தில் ஆத்திரம் வந்தது. வாழ்க்கை இவைகளுக்கு விடை தந்தது! விதி!

ஒப்புக்கு, ''நல்லா இருக்காங்க...'' என்றேன். எங்கோ பார்வையை ஓட்டினார் அப்பா.

இது ஒரு கேள்வி, இது ஒரு பதில்! என்னாலேயே இதை ஜீரணிக்க முடியவில்லை.

நாங்கள் ராஜா மாதிரி வாழ வேண்டியவர்கள். நூற்றி ஐம்பது பவுன் நகைகளும்; ஒரு பெரிய வீடும் அப்பாவின் பயவால் நழுவிப் போய்விட்டன. அவருக்காகவே வாழ்ந்த அம்மா, அவரது சொல் மதிப்புக்குத் தளர்ந்து ஒவ்வொன் றாய்க் கழட்டி, கையெழுத்துக்கள் போட்டு...பணம் எதற் காகச் செலவிடப்பட்டது என்று யாரும் கேட்கவில்லை! நடந்து முடிந்தவைகளைப் பேசிப் பயன் என்ன? ஆனால், இருவரும் தண்டவாளங்களைப் போல் ஆனார்கள்.

கூடினால் நிச்சயம் சண்டையும் குற்றச்சாட்டுகளும் உண்டு என்பதால், அம்மா செல்வச் செழிப்புடன் வாழ்ந்த ஊரைவிட்டு, பாண்டிச்சேரியில் தனது மூன்று ஜீவன்களுடன் காலூன்றினாள். அப்பாவால் அதைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. மனவலிமையும் இல்லை. குடும்பமே அவரை தள்ளி வைத்தது போல் பிரிந்து விட்டது. அப்பா ஒரு தனித் தீவு ஆனார்.

ஒரு வகையில் அம்மா பாவம்...ஒரு வகையில் அப்பா பாவம்! ஆக, அப்பாவும் அம்மாவும் வெவ்வேறு கைதி களானார்கள்—மனதளவில், பார்வை அளவில்!

எனக்கும் உடன் பிறந்தவர்களுக்கும் அப்பா வெகுதூர மாகிப் போனார்.

''போகலாமா ரமணா?''

சிந்தனையிலிருந்து மீண்டேன். அப்பாவின் கையில் 'பில்' இருந்தது. தடுக்கத் தடுக்க அவரே பணம் செலுத்தினார்.

இதோ, இன்னும் சற்று நேரத்தில் இருவருக்கும் உள்ள உறவு விலகப் போகிறது.

மறுபடி அப்பா பார்ப்பதற்கு அரிதாகிவிடுவார்.

வெளியில் வந்தோம்.

"ரமணா...என்னை குத்தாலம் பஸ்ஸுல ஏத்திவிடறியா? அங்க ஒரு வேலையை முடிச்சுக்கிட்டு முக்கோட்டை போய்ச் சேரணும். இப்பல்லாம் கண்ணு லேசா மறைக்குது!"

வாகாக சாய்வு நாற்காலியில் அமர வேண்டியவர்... அலைகிறார்.

இது இனி மாற்றி எழுதப்படப் போவதில்லை. எனக்கு வினைப்பயன் மேலும், விதியின் மேலும் பூரண நம்பிக்கை உண்டு!

அப்பா, நடு வெய்யிலில் அதிகமாகவே வியர்த்துப் போயிருந்தார்.

அங்கவஸ்திரத்தால் துடைத்துக் கொண்டார். ஒரு பஸ், புழுதிகளுடன் வந்து நின்றது. அது அப்பாவைப் போலவே இருந்தது!

எல்லோரும் இறங்கி முடிக்க, நான் அப்பாவை மெல்ல ஏற்றிவிட்டேன்.

பஸ் பிளிர ஆரம்பித்தது. அப்பா ஜன்னலில் இருந்து எட்டிப் பார்த்துக் கேட்டார்.

"எத்தனை மணிக்கு ரமணா இன்டர்வியூ?"

"ரெண்டு மணிக்குப்பா!"

பஸ் நகர, இருவரும் சிநேகமாய்த் தலையாட்டிக் கொண்டோம்.

அப்பாவின் கடைசிக் கேள்வி என் நெஞ்சில் படிந்தது.

'அப்பா பொறுப்பு உள்ளவர்தானோ?!'

பாக்யா
ஜனவரி 1992

# எனக்கு
# நீ
# வேண்டும் !

○

அம்மாவின் முகத்தை நினைத்துப் பார்த்தால் சரஸ்வதி முகம்தான் முன்னே வருகிறது. ஐந்து விரல்களையும் வாகாக பிசையப்பட்ட சாதத்தில் நுழைத்து, நுனியில் உணவையெடுத்து எனது வாயில் ஊட்டிவிடும்போது அவளது வாயும் எனது வாயைப்போல் குவிந்து சின்னதாகும். அம்மா இனிமை. வழவழவென்ற அவளது கழுத்தில் கட்டிக் கொண்டு பின்புறமாய் இயற்கையழகை ரசித்ததாய் ஏதோ ஒரு பிசிறு. பின்னால் வருபவர்கள் யார் யாரோ. ''வா, வா...வர்றீயா?'' என்று இருகைகளையும் நீட்டி கூப்பிட்டது பதிந்து போயிருக்கிறது.

''யானைன்னா எப்படிம்மா இருக்கும்?''

''யானைன்னா, கருப்பா...குண்டா...உயரமா தும்பிக்கை வச்சுகிட்டு, ஆடி அசைஞ்சு வர்ற மிருகம். அதோ பின்னால தெரியுதே, அது மாதிரி இருக்கும்...'' அம்மா 'வெங்கடேஸ்வரா ஆயில் மில்லின்' பெரிய பெரிய எண்ணெய் பேரல்களைத்தான் காட்டியிருக்க வேண்டும். பெரிய டயர் பரப்பி, அதன்மேல் உருட்டி உருட்டி கீழே தள்ளுவார்கள். மலை பெயர்ந்து விழுவதுபோல 'எண்ணெய் பேரல்கள்' உருண்டு தவழும்.

அம்மா, சரஸ்வதியைப் போன்றே வெள்ளைப் புடவை கட்டியிருப்பாள். நெற்றியில் சரஸ்வதி

யைப் போன்றே வளைந்திருக்கும் அழகிய புருவங்களுக்கு இடையில் 'ஒவல்' வடிவில் திருநீறு நிரந்தரமாய் இருக்கும். சரஸ்வதியைப் போன்றே சுருண்ட கூந்தல் தோள்வழியே பரவி நிற்கும். ஆனால், தலை உச்சியில் கிரீடம் மட்டும் இருந்ததில்லை.

அம்மா சில சமயங்களில் மொட்டைமாடியில் தன் வயிற்றில் என் தலையை வைத்துக்கொண்டு படுத்திருப்பாள். நிலவு நாட்களில் மட்டும் ஏதோ சிந்தனையில் இருப்பாள். நிலவு அழகு. பரந்த வானத்தில் ராஜாவைப்போல தான் மட்டும் பிரகாசமாய் தனித்திருக்கும். அதற்குப் பயந்து தூரத்தில் நட்சத்திரங்கள் மின்னிக்கொண்டிருக்கும்.

''அம்மா, நிலா கீழே வராதோ?'' என்று கேட்டிருக்கிறேன்.

''வராது, நாம வேணும்னா அங்க போகலாம்...''

''என்னை கூப்டுகிட்டு போவியா?''

''நீ நெறையா படிச்சு, பெரியவனானப்புறம் 'ராக்கெட்ல' போகலாம்...!''

''ராக்கெட்டுனா?'' என் கேள்வி தொடர்ந்திருக்கிறது. அம்மா பதில் சொல்ல தயங்கி இருந்ததில்லை. பொல பொலவென்று பதில்களை உதிர்த்துக்கொண்டே இருப்பாள்.

ஒரு தடவை, ''அப்பான்னா என்ன?'' என்று கேட்டிருக்கிறேன். அம்மா அதற்கு மட்டும் மௌனம் சாதித்தவள் திடீரென்று அழுதிருக்கிறாள். என்னை மார்போடு கட்டியணைத்துக் கொண்டு குலுங்கியது என் நெஞ்சப் பிரதேசத்தில் வடுவாய் வீற்றிருக்கிறது. அதன் பிறகு 'அப்பா' என்றாலே அழக்கூடிய விஷயம் என்று எனக்குள் பதித்துக் கொண்டேன்.

அம்மா, சரஸ்வதியைப் போலவே வீணை வாசிப்பாள். 'டொய்ங்...டொய்ங்' என்று நான், என் பிஞ்சு விரலால் கஷ்டப்பட்டு பிறாண்டும்போது அம்மா கம்பிகளை மாற்றி

மாற்றி சுட்டிக்காட்டி, ''இங்கே. இங்கே" என்பாள். அங்கங்கு ஒரு ஒலியெழும்பும். என் கன்னத்தில் தன் முகத்தை ஆழமாய்ப் பதிப்பாள். காதைக் கடித்து குறுகுறுக்க வைப்பாள். பிறகு, அம்மா தன் நீண்ட அழகான விரல்களால், வீணையினை மீட்டுவாள். விதவிதமாய் ஒலிகள் பூஜையறை முழுவதும் பரவும். ஊதுவத்திகளின் ரம்யமான மணம் அதனை ஆட்கொள்ளும்.

''உன்னை இந்த வீணை கூப்பிடப் போகுது பார்...!" என்பாள்.

''எப்டி...?'' கைகளை, கன்னத்தில் பதித்துக்கொண்டு கேட்பேன்.

''தோ...பார்...!"

வீணையின் கம்பிகளில் சிலவற்றை லாவகமாய் அழுத்திக் கொண்டு விரலால் சுண்டியபோது, வீணை, ''ராஜா!'' என்று கூப்பிட்டது. மெய்சிலிர்த்தது, ஆச்சரியப்பட்டேன். அம்மா இப்போது, ''என்னோட பேரைக் கூப்பிடப் போகுது பார்!'' என்று மறுபடியும் விரல்களை மாற்றி சுண்ட, ''சந்...ரிகா...ஆ!'' என்று ஒலியெழுப்பியவாறு இன்னும் ரீங்காரமாய் பாடியது.

''அப்புறம் இப்ப பாரு...!" என்று அம்மா மறுபடி மீட்ட, யாரையோ கூப்பிடுவதுபோல இருந்தது.

''இப்ப யாரைக் கூப்பிடுது...?" என்றேன்.

''உங்க அப்பாவை...!'' என்ற அம்மாவின் முகத்தில் சந்தோஷம் கொப்பளித்துக் கொண்டிருந்தது. மூன்று பேரையும் இணைத்துப் பார்த்த பரவசமாய் அவளுக்கு இருந்திருக்கலாம். சரஸ்வதியைப் போன்ற சர்வபூர்வமான புன்னகை அவளையறியாது கிளம்பியது. வீணையை நகர்த்தி வைத்துவிட்டு என்னை தன்பால் இழுத்து உச்சிமோர்ந்தாள்.

யாரோ எனது தோளில் சாய்வது போல இருந்தது. நினைவுகளிலிருந்து விடுபட்டேன்.

''என்ன, ஐயா 'மானேஜ்மெண்ட் மீட்டிங்' சம்பந்தமா ஏதோ புள்ளி விவரம் எழுதப் போறதா சொல்லிட்டு மாமரத்தையே வெறிச்சுக்கினு இருக்கறீங்க...?'' வத்சலா என்னிடம் கொஞ்சலாகக் காதருகில் கேட்டாள். மீசையைப் பிடித்து இழுத்துச் சிரித்தாள்.

''பத்து மணிக்கு என்ன திடீர் சிந்தனை?''

''ஒண்ணுமில்லை.''

''இன்னிக்கு உங்களுக்கு 'வீக்லி ஆஃப்'. இன்னிக்கும் ஹோட்டல், ஹோட்டல்னு மனசை உளப்பிக்கிட்டு இருக்காதீங்க...!''

''அதெல்லாம் ஒண்ணும்ல...!''

''சூடா டீ போட்டுத் தரவா...?'' என் பனியனில் தொற்றிக் கொண்டிருந்த சிற்றெறும்பை தட்டிவிட்டாள்.

''டீயெல்லாம் வேணாம். கம்னு இரு...''

''இல்ல நீங்க எதையோ யோசிச்சுக்கிட்டிருக்கீங்க. எல்லாத்தையும் வுட்டுத் தள்ளுங்க. இன்னைக்கு சாயங் காலம் நாம பீச்சுக்கு போறோம். அப்புறம், தங்க மாளிகை போய், உங்களுக்கு ஒரு மைனர் செயின் புது மாடல்லே வாங்கிகிட்டு, எனக்கொரு சிவப்புக்கல் பதிச்ச மூக்குத்தி வாங்கிகிட்டு, 'மாஸ்ல' டின்னர். என்ன ஓ.கே.யா?''

''மூக்குத்தியா? அம்மா மூக்குத்தி போலயா?'' என்றேன். அம்மா மூக்குத்தியின் ஜ்வலிப்பு இன்னும் மனதையே சுற்றிக் கொண்டிருக்கிறது.

''எங்க அம்மா மூக்குத்தியெல்லாம் பழைய மாடல்...'' என்று வத்சலா, தன் அம்மாவைப் பற்றிக் குறிப்பிட்டாள்.

''சரி, போகலாம்...'' என்று அத்துடன் முற்றுப்புள்ளி வைத்தேன்.

''ஒரு நிமிஷத்துல டீ போட்டுட்டு வந்துடறேன்...'' வத்சலா புதுத் தெம்போடு சந்தோஷித்து என் கன்னத்தில் முத்தமிட்டுவிட்டு ஓடினாள்.

ஒலிப்பேழையைத் தட்டிவிட்டேன், ஜேசுதாஸ் எனக்கு உயிர். ''அழகர்மலையினில் மனம் ஓடி விளையாடும்...'' என்று பாட, எனக்குள் நிம்மதி பிறந்தது. தனிப் பிறப்பு. மனிதப் பிறப்புகளில்தான் எத்தனை வகை, வித்தியாசங்கள்? யாரும் ஒன்றாய், ஒரேமாதிரியாய் இருக்க முடிவதில்லையே? நானும் ஜேசுதாஸாய் இருந்தால்...ஒரு வேளை அம்மா இருந்திருந்தால்... நடந்திருக்குமோ? ஜேசுதாஸ் ஏன் என்னைப்போல நட்சத்திர ஹோட்டலில் 'டை' கட்டிக் கொண்டு மேலாண்மை செய்யவில்லை? வித்யாசங்களே வாழ்க்கையை அவரவர்க்கு பகிர்ந்து சுவைப்பட வைக்கிறதோ? செய்யும் தொழில் தெய்வம். ஆனால், இந்த இசைத்துறை ஏன் இப்படி அதிகமாய் வேறுபட்டு நிற்கிறது? காலில் விழுந்து பூஜிக்க வேண்டும் போலிருக்கிறது?

''திருக்கோயில் முற்றந்தனில் தாமரை...'' பாடல் தொடர்ந்து கொண்டிருந்தபோது, வத்சலா ட்ரேயில் டீயும் பிஸ்கெட்டுகளும் கொண்டு வந்தாள். ஓசையெழுப்பாது வைத்து, என்னருகில் நின்றாள்.

ஜேசுதாஸை உள்வாங்கிக் கொண்டிருக்கும்போது, இடர்ப்பாடு நேர்ந்தால் எனக்கு கோபம் வருமென்று கல்யாணமான மூன்றாம் நாளே வத்சலா புரிந்துகொண்டாள். நான் அந்தப் பாடலோடு நிறுத்தினேன்.

''நீங்க வேணும்னா பாட்டு கேளுங்களேன்!''

''போதும், உட்கார். டீ எடுத்துக்கோ...'' மூங்கில் நாற்காலியில் அமர்ந்தாள். நாற்காலி மிகவும் பழையது. அம்மா அதில்தான் அமர்ந்துகொள்வாள். அவளுக்கென்றே செய்தது போல பொருந்தி அமைந்த நாற்காலி. ஏதாவது அதம் செய்தால் என்னைத் தூக்கி அதில் உட்கார வைத்து

விட்டு போய்விடுவாள். உயரத்தைப் பார்த்து பயந்துபோய் அழக்கூட திராணியில்லாது முழித்துக்கொண்டு கெட்டியாய் பிடித்தபடி அமர்ந்திருப்பேன். பிறகு, வேலையெல்லாம் முடித்து விட்டு வந்து தூக்கிக்கொள்வாள். என் பயத்தைப் பார்த்து வாய்விட்டுச் சிரிப்பாள்.

''நீ பயப்படவே கூடாது...!" என்பாள். நாளடைவில் அந்த நாற்காலி எனக்கு பயத்தை ஏற்படுத்தவேயில்லை. எழுந்து நின்றுகொண்டுகூட இருப்பேன்.

"டீயைக் குடிக்காம மறுபடியும் என்ன சிந்தனை...?" —வத்சலா மறுபடி என்னை உசுப்பினாள்.

''அம்மா...!" என்றேன். நாற்காலியில் இன்னும் சாய் வாக அமர்ந்து கொண்டேன். வத்சலா, என்னையே பார்த்துக்கொண்டிருந்தாள். நான் இயல்பாய் மாற்றிக் கொண்டேன்.

''இன்னைக்கு என்ன சமையல்...?"

''ஹப்பா! சுய நினைவுக்கு வந்தாச்சா? இன்னிக்கு பூண்டு குழம்பும் துவையலும் நேத்து வயிறு சரியில்லைன்னு சொன்னீங்களே! பூண்டு உடம்புக்கு நல்லது...''

''அப்படியா?'' என்றேன். அம்மா ஊட்டிய அந்த சாதத்திற்கு ஈடு ஏதாவது உண்டா?

''மாமாவுக்கு லெட்டர் போட்டீங்களா?"

''போடணும். எதுவும் ஓடமாட்டேங்குது. ஹோட்டல்ல பத்துமணி நேரம் பிரச்னை. எல்லாத்தையும் தீர்த்துவைக்க வேண்டியிருக்கு, லீவுன்னு வந்தா பிரமிப்பா இருக்கே யொழிய, மனசு ஓடலை. சரி, இப்ப லெட்டரை எழுதிட றேன்...!''

சிவராஜ் மாமா. அம்மாவின் ஒரே தம்பி, நான் என்றும் வணங்கக்கூடிய மனிதர்.

அம்மா, ஒரு நிலவற்ற நாளில், எனக்கு சாதம் ஊட்டிய பிறகு இறந்து போனாள். ''நிலா எங்கே, நிலா எங்கே?'' என்று கேட்க கேட்க பதிலே தராது இருந்தாள். பலர் அழுது கொண்டிருந்தனர். அம்மாவை படுக்க வைத்திருந்தனர். எப்போதும் அம்மா என்னோடு ஒருக்களித்து, முதுகின்மேல் கையைப் போட்டுக்கொண்டுதான் தூங்குவது வழக்கம். அன்று அவள் மட்டும் தனியாக படுத்துக்கொண்டு இருக்க, பலர் சுற்றி நின்று அழுது கொண்டிருக்கின்றனர். நிறைய பேர் என்னை சோகமாய்த் தூக்கிக் கொண்டனர். நான் சோர்விலும் சத்தத்திலும் மத்தியில் கண்களை மூடிக்கொண் டேன். தூக்கம் வந்தது.

காலையில், சூரியனின் இதமான ஒளியில் யார் மடியிலோ இருந்தேன். யாரோ அம்மாவிற்கு பதிலாக, பால் டம்ளரை என்னிடம் கொடுத்தார்கள். தோட்டத்தில் புத்தம் புதிய செம்பருத்திப் பூக்கள் பனியால் சிலிர்த்துக்கொண்டிருந்ததாக ஞாபகம். அம்மா தினமும் பூக்களைப் பறிப்பாள். சுவாமி படங்களுக்குச் சூட்டுவாள். பூவின் இதழைப் பிய்த்து எனக்கு தின்னக் கொடுப்பாள். பால் குடித்து முடித்தபோது, மாமா வந்தார். அம்மா, அவரை ''தம்பி, தம்பி...'' என்று கூப்பிட் டுக் கொண்டேயிருப்பாள். மாமா என்னருகில் அமர்ந்து தூக்கி மடியில் வைத்துக் கொண்டார். கன்னத்தில் முத்த மிட்டார். கரகரவென்று அவரது கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகிவர, எனக்கு சிரிப்பு வந்தது. அம்மாதான் சொல்லுவாள்: ''சின்னக் குழந்தைங்கதான்—நம்ம ஸோபியா பாப்பா மாதிரி—குழந்தைங்கதான் அழுவும். நீ அழ மாட்டியே...!'' என்று. மாமா ஏன் ஸோபியா பாப்பா மாதிரி அழுகிறார்? மாமா, என்னை வீட்டுக்குள் தூக்கிக் கொண்டு போனார். அம்மாவோ இன்னும் தூங்கிக்கொண் டிருந்தாள். விளக்கு இன்னும் அணையாமலிருந்தது. ஊதுவத்தி அறை முழுவதும் வெண்மேகங்களாய் வாசனை யைப் பரப்பிக் கொண்டிருந்தது. இன்னும் பலர் அழுது

கொண்டிருந்தனர். ஸோபியாவுடன் அவள் அம்மாவும் அழுதுகொண்டிருந்தாள்.

வெளியில் ஏதோ மணியோசையும் ஊது ஓசையும் கேட்டுக் கொண்டிருந்தன. பலர் பரபரப்பாய் அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருந்தனர். சிலர் பூக்களால் ஆன அழகான தேர் ஒன்றை செய்துகொண்டிருந்தனர். ஆனால், சின்ன தேர்!

அம்மா தேர் காட்டியிருக்கிறாள். என்னையும் கைப் பிடித்து இழுக்க வைத்திருக்கிறாள். தேர் என்பது மிகப் பெரியவிஷயம். உயர்ந்து அழகாய் வேலைப்பாடுகள் செய்யப் பட்டு, நான்கு புறமும் வண்ணத் துணியால் ஆன உருளை கள் அழகாய் அசைந்தாடும். பூக்களால் அலங்கரிக்கப்பட்டு, சுவாமியை அதில் வைத்து, ஊர்வலமாய் இழுத்து வருவார் கள். ஐயர் உட்பட, நாலைந்து பேர் அதில் அமர்ந்திருப்பார் கள். ஐயர் தேங்காய் உடைத்து, தட்சணை பெறுவார். உதவி யாளர்கள் சூடம்காட்டி, விபூதி குங்குமம் பிரசாதம் கொடுத்து உதவுவர். மக்களோ கோலாகலமாய் உருண்டு திரண்ட தேங்காய் நாரிலான கயிற்றைப் பிடித்து 'தம்' கட்டி இழுப்பர். தேர் சக்கரங்கள் அகன்று, பருத்து இருக்கும். மெல்ல அசைந்தாடி நகரும். மக்கள் சந்தோஷிப்பார்கள்.

அம்மாவும் தேர் இழுத்திருக்கிறாள். என்னை இடுப்பில் வைத்துக் கொண்டு ஒற்றைக் கையாலேயே இழுத்திருக் கிறாள். அம்மாவுக்குதான் எவ்வளவு பலம்? தேர் நகர்கிறதே! நானும் குனிந்து கயிற்றை தடவி இழுத்திருக்கிறேன். எனக்கும் தேர் நகர்ந்திருக்கின்றது.

அம்மாவின் முகத்தில் ஈக்கள் மொய்க்க முயலுகின்றன. அருகிலிருப்பவர்கள் துரத்தியடிக்கிறார்கள். அம்மா ஏன் தூக்கத்திலிருந்து எழ மாட்டேன் என்கிறாள்? இந்நேரம் குளித்து முடித்து, தலைசீவிக் கொண்டிருப்பாளே!

கொஞ்ச நேரத்தில் அம்மாவை அந்தத் தேரில் ஏற்றி னார்கள். நிறைய பேர் கதறியழுதார்கள், மாமா, என்னிடம் ஒரு சிறு புகையும்பானையைக் கயிறு கட்டி ஊஞ்சலாடுவது போலக் கொடுத்தார் தேர் புறப்பட்டது. இந்தத் தேர் யாராலும் இழுக்கப்படவில்லை. நாலைந்து பேர் தோளில் தூக்கிக்கொண்டு நடந்தார்கள்.

அம்மாவின் அழகான முகம் வறட்டிகளால் மூடப்பட்டது. மாமா, என் கைகளைப் பிடித்துக் கொண்டு நெருப்பு வைத்தார். மெல்ல புறப்பட்ட தீயானது கொழுந்து விட்டு எரிந்தது. திகுதிகுவென்று எரிவது எனக்கு விந்தையாக இருந்தது.

சில நாட்களில், மாமாவுடன் நானும் ஊருக்குப் புறப் பட்டேன்.

''ரயில் பார்த்திருக்கியாடா?'' என்றார் மாமா. ''அதில் தான் நாம போகப் போறோம்...'' என்றார்.

''அம்மா எங்கே?'' என்றேன் நான்.

''அம்மா முன்னாடியே ஊருக்குப் போயிட்டா. நாம இப்ப போகலாம்...!''

சிவராஜ் மாமாவை மறக்கவே முடியாது. தந்தைக்குத் தந்தையாய், தாய்க்குத் தாயாய் அவர்தான் இருந்தார். கல்யாணம்கூட செய்துகொள்ளாமல் என்னை வளர்ப் பதிலேயே—என் வளர்ச்சியிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தார். தான் இருந்த தனியார் கம்பெனியில் ஸ்குரு டிரைவர் பிடித்து, படிப்படியாய் நுணுக்கங்கள் கற்று, உயர் அந்தஸ்தும் பெற்றார். என்னை நல்ல பள்ளியில் படிக்க வைத்து, மனிதர்களே இல்லாமல் தனித்திருந்த நான், அனேகம் பேரை சந்திக்கக்கூடிய 'ஹோட்டல் மேனேஜ் மெண்ட்' படிக்க வைத்தார். நான் முன்னேற அவருக்கு

வயது ஏறிக்கொண்டே போனது. நானே, அவரது திரு மணம் பற்றி பேச்செடுத்திருக்கிறேன். மாமாவிடமிருந்து ஒரு புன்சிரிப்பு வெளிவரும். பிறகு, ''அதெல்லாம் என்னத் துக்கு இப்ப...?" என்று கூறிவிடுவார். அதற்குப் பின்னால், ஆழ்வருத்தம் இருக்காது.

மாமாவின் மனோதிடம் யாருக்கும் வராது. படிப்பு முடித்து, நான் பெரிய ஹோட்டலில் மானேஜராகப் பதவி பெற, எனக்கு மாமா தனது நண்பரின் பெண் வத்சலாவைக் கட்டி வைத்தார். நானும் மாமாவும் எனது வேலையின் 'ஊர் மாற்றத்தால்' பிரிந்தோம். மாமா தனது உழைப்பைத் தொடர்ந்தார்.

''என்னோட வந்துடுங்களேன்!..." என்றதற்கு,

''அதுக்கு ரொம்ப வருஷம் இருக்கு...!'' என்று மாமா புன்சிரிப்பை உதிர்த்து, தட்டிக் கொடுத்தார்.

ஒரு தனி மனிதரால் எப்படி இதெல்லாம் சாத்தியம் ஆயிற்று? நினைத்தால் வியப்பாயிருக்கிறது.

என் விதியை நான் நொந்துகொள்வேன். தந்தை, தாய் ஸ்பரிசங்கள் ஏன் என்னுடன் நீடிக்கவில்லை? தாய் என்பவள்தான் எவ்வளவு இனிமை? அறிவுரைக்கும் ஆறுத லுக்கும் அன்புக்கும். என் நண்பர்களுக்கு அம்மாக்கள் இருக் கும்போது எனக்கு இல்லாதது பெரிய வடுதான். ஆனால், மாமாவைப் பார்க்கும்போது மனம் சற்று அமைதியடைகிறது.

வத்சலா எழுப்பியதும்தான் தெரிந்தது. அப்படியே நினைவுகளில் மூழ்கி அந்த பிரம்பு நாற்காலியிலேயே தலை யைச் சாய்த்து அயர்ந்திருக்கிறேன்.

''என்னங்க ஆச்சு...?" என்ற வத்சலா, என் கழுத்தில் கையை வைத்துப் பார்த்தாள்.

''ஒண்ணுமில்ல, வத்சு..." என்றேன்.

"இல்லை. காலையிலேந்தே ஒரு மாதிரியா இருக்கீங்க. என்ன விஷயம்? ஏதாவது பிரச்சினையா?"

நான் அவளைப் பார்த்தேன். எனக்குள் பிரச்சினையிருக்கிறது. அதைத் தீர்த்துக்கொள்ள வேண்டும். அவளது கையைப் பிடித்துக் கொண்டேன். அவள், என்னருகில் முழங்காலிட்டு அமர்ந்தாள். என் தொடையில் தலைவைத்து, "என்னம்மா ஆச்சு...?" என்றாள். அவளது பிடரியில் முகம் புதைத்து குலுங்கினேன். நிமிர்ந்து என்னை கண்ணீர் ததும்ப நோக்கினாள்.

"எனக்கு அம்மா வேண்டும்" என்றேன். அவள் என்னை ஆதரவுடன் பிடித்துக் கொண்டாள்.

இரவு. ஒன்பது மணி. காரிலிருந்து நாங்கள் மூன்று பேரும் இறங்கினோம். "இதுதாம்மா நம்ம வீடு...!" என்றேன். அந்த 'சுமைதாங்கி'—என்ற ஆதரவற்றோருக்கான அமைப்பிலிருந்து வந்த தாயின் கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்து வந்தது. நானும் வத்சலாவும் தாங்கிக் கொண்டோம். யாரோ ஒரு மகனால் ஆதரவின்றி விடப்பட்டிருந்த அந்தத் தாயை நாங்கள் தத்து எடுத்துக்கொண்டோம்.

ராஜம்
மே, 1993

## நட்சத்திரம்

○

ஆரம்ப காலங்களில், வத்சலா விட்டுக்குப் போய் வருவதின் புள்ளி விவரங்கள் என்னிட மிருந்தன. 'இது ஆறாவது தடவை, ஏழாவது தடவை' என்று என் உள் மனசு அலறும். ஆனால், போகப்போக அது மறந்து போகக் கூடிய சாதாரண விஷயமானது.

வத்சலாவை நான் இருட்டிய சமயங்களில்தான் பார்த்திருக்கிறேன். அவளது ஓட்டு வீடு ஊரின் கோடியில் ஏழு கிலோ மீட்டர் தூரத்தில் மாரி யம்மன் கோயிலை ஒட்டி அமைந்திருந்தது. குளிருக்கு மிகவும் அடக்கமான வீடாய் அது விளங்கியது மிகவும் குளிராய் இருப்பின், வத் சலாவின் இதமான சூட்டோடு, அந்த வீட்டின் சூடும் இணைந்து உடலுக்குச் சாரசரி வெப் பத்தை வழங்கும் விதமாக அது அமைந்திருந் தது.

மணியடித்தால், ''யாரு?'' என்றபடி கதவைத் திறப்பாள். ''வாங்க...'' என்பாள். மற்றபடி, ''ஏன் லேட்டு...கீட்டு...'' என்றெல்லாம் கேள்வி இராது. 'சௌக்கியமா?' என்றெல்லாம் ஒரு போதும் கேட்டதில்லை. இங்கு வருபவர்கள் சகல சௌக்கியங்களோடு வருவதில்லை என்று அவள் தீர்மானித்து வைத்திருக்கிறாளோ, என் னவோ? பிரியாணி, கோழிக்கறி என்று ஏதாவது

வாங்கி வந்தால் நாமேதான் சாப்பிட வேண்டும். அவள் தொடவே மாட்டாள். அன்று நான் வாங்கி வந்தபோது 'வெஜிடேரியனா?' என்று கேட்டேன் 'இல்லை' என்று தலையை ஆட்டிவிட்டு, கைகளை அறையின் மூலைக்குக் காட்டினாள். அங்கு சில கோழி சம்பந்தப்பட்ட அங்க அடையாளங்களும் மந்தார இலைகளும் கிடந்தன.

முறையாகக் குறிப்பிட்ட பணத்தைதான் வாங்கிக்கொள்வாள். உணர்ச்சிவசப்பட்டுக் கொடுக்கும் அதிகத் தொகையை மறுத்துவிடுவாள். எனவே, எனக்கு அவள் மிகவும் வித்தியாசமாகக் காட்சியளித்தாள்.

எனக்கு அவள் அறிமுகமானது 'சீட்டி' (இயற்பெயர்: *சீ. கிருட்டிணமூர்த்தி*) மூலம்தான். சீட்டி 'நீல விளக்கின் பரப்பில்' என்று ஒரு கவிதைத் தொகுப்பையும் போட்டிருக்கிறான். அவன் அன்று நிறைய குடித்துவிட்டு ரோடில் நடந்தபோது லாரி ஏறி இறந்துபோனதற்கு முதல்நாள்தான் அவளை எனக்கு அறிமுகப்படுத்தியிருந்தான். வத்சலா எல்லோரையும் அரவணைப்பவள் அல்ல; எனவே, அப்பொழுது எனது வரவை அவள் விரும்பியிருக்கவில்லை.

மறுநாள், லாரி ஏறியிறங்கிய விஷயத்தை அவளிடம் சொல்ல ஓடினேன். 'என்ன?' என்பதைப் போல பார்த்தவளிடம்,

"சீட்டி ஆக்ஸிடெண்ட்ல ஸ்பாட்லயே செத்துட்டான்..." என்றேன் நெஞ்சில் கனத்தோடு.

"சே, பார்த்து போயிருக்கலாம்ல!" என்ற இரக்க வெளிப்பாடுதான் அவளிடமிருந்து உதிர்ந்தது. தவிர, ஏதும் அதிர்ச்சியில்லை.

"உனக்கு சம்பந்தமேயில்லையா?" என்றேன்.

"எது...?" என்றாள்.

''உன்னை நாடி நாடி வந்தானே... ஒரு சின்ன சொட்டுக் கண்ணீர் கிடையாதா...?" என்றேன் மூக்கு புடைக்க.

''ஏன்...?'' என்றாள். ''எங்க ரெண்டு பேருகிட்டேயும் ஏதும் மிச்சம் மீதி கிடையாது...'' என்று இயல்பாய் பேசினாள்.

''நீ... தேவடியாதானே?'' என்று வெளியில் வந்தேன். அவள் என்னை ''சார்...'' என்று கூப்பிட, திரும்பினேன்.

''நீங்க ரொம்ப அதிகமா பேசறீங்க...!''

''சரிதான் போடி...!" என்று கூற, நாக்கு எழும்ப வில்லை. காரணம் அவள் குரலில் இருந்த அழுத்தம் மற்றும் உறுதி. ஹீரோஹோண்டா கதற, குர்தா காற்றில் சலசலக்க 'விர்ரென்று' போனேன்.

'எதற்கு அவளிடம் கோபம் கொள்ள வேண்டும்? அவளைக் கோபப்பட வேண்டியதன் அவசியம் என்ன?' என்றும் தோன்றியது. சீட்டியைப் பார்க்க மனம் ஹோண்டா வுடன் பறந்தது.

வீட்டில் தலைமுழுகி, டேபிளில் கைகளை ஊன்றியவாறு யோசித்தவன் அப்படியே அயர்ந்து போயிருக்கிறேன். ஆழ்ந்த உறக்கத்தின் மத்தியிலும் சீட்டியும் வத்சலாவும்தான் வந்து நின்றார்கள்.

சீட்டி, வத்சலாவிடம் இருந்துவிட்டு வந்தவுடன் அவனது அப்பார்ட்மெண்டில் இருக்கும் சிறு புங்கை மரத்தின் கீழ் அமர்ந்து, நிறைய கவிதைகளை எழுதித் தள்ளுவான். அவன் சாதாரண சமயங்களில் எழுதும் கவிதைகளைவிட அப்பொழுது எழுதக்கூடிய படைப்புகள் உணர்ச்சிபூர்வமாக, எதார்த்தமாக இருப்பதை உணர்வேன். அவனே ஒத்துக் கொள்வான்.

''இது வத்சலா மூலம்தான் ஏற்படுது...!'' என்றான்.

''ஏண்டா இப்படி புத்தி? ஆ...ஊ...ன்னா வத்சலாங்கிறே! ஒரு கல்யாணம் பண்ணிக்கோயேன்...'' நான் வெகுண்டெழுவேன்.

''வேணாம்டா. சுதந்திரம் போயிடும். நீ நீதிக்கதைகள் எழுதறவன். உனக்கு இது தப்பாதான் படும். நா அனுபவ ரீதியா எழுதறேன். வத்சலாகிட்டே கிடைக்கிற அனுபவம் தனி....''

''நான் அனுபவ ரீதியாக எழுதாமத்தான் எனக்கு இவ்ளோ பேர் கிடைச்சிருக்குதாக்கும்...!''

''நீ ஒரு அளவைத்தான் கடந்திருக்கே. இன்னொரு பக்கம் தெரியாது ஆனா உனக்கு இது போதும். நீ பொண்டாட்டி, குழந்தைன்னு குடும்பஸ்தனா இருக்கிறவன். அப்படியே பழகிடு...''

அவனுக்கு வத்சலாவைப் பற்றி ஏதேனும் சொன்னால் கோபம் வரும். பேனாவையே அசிங்கப்படுத்தியது போல வெகுண்டெழுவான்.

''ஒரு தடவை அவளை நேர்ல பாரு! அவள் முகத்திலேயே ஒரு உத்வேக உணர்ச்சி தெரியும். கவிதை தானா கொட்டும்...''

''ஃபூல்! நீயா நினைச்சுக்கறது அது...!''

அன்றிரவு வலுக்கட்டாயமாக அழைத்துப் போனான். எனது உறுதியான உள் வக்கிரத்தால் அவளொன்றும் பிரமாதமாகத் தெரியவில்லை.

தோள்கள் வலிக்க தூங்கிக் கொண்டிருந்தவனை, ராஜலஷ்மி தட்டியெழுப்பினாள். கண்கள் எரிய எழுந்தேன்.

''தூக்கம் வந்தா மேலே படுக்க வேண்டியதுதான...?'' என்று சொல்லி தலையணையை சரிப்படுத்தியவளை மங்க

லாக பார்த்தபடி படுக்கையில் சாய்ந்தேன். தூளியில் தொங்கிய குழந்தையிடம் சிறிது ஆட்டம் வர, சற்று ஆட்டிவிட்டு என்னருகில் படுத்து எனது மார்பின்மீது கையைப் போட்டுக் கொண்டு தூங்க ஆரம்பித்தாள்.

தொடர்ந்த கனவில் வத்சலாவே புயற்காற்றாய் சுழன்றாள். அவ்வப்பொழுது சீட்டியும் இடம் பெற்றான்.

இரண்டாம் நாள், பத்திரிகையிலிருந்து கதைகளும், கட்டுரையும் கேட்டிருந்தார்கள். கொஞ்சம் பிரபலமாகிவிட்டால் 'குடு, குடு...' என்று போட்டுக் குடைவார்கள். 'மூளையைக் கசக்கு' என்ற கட்டாயம். இந்த பாரத்தையெல்லாம் மீறி, மனது எங்கோ சுழன்று கொண்டிருந்தது. உள் மூளையில் வத்சலாவின் முகம் பதிந்துவிட்டது.

பலவித எண்ணங்களுக்குப் பிறகு பத்து மணி வாக்கில் ராஜலஷ்மியிடம், "பத்திரிகையில அவசர வேலை" என்று பொய் சொல்லிவிட்டு வத்சலா வீட்டை நோக்கிப் பறந்தேன். இருளின் தனிமை அங்கு விலகியது போல உணர்ந்தேன்.

இப்படித்தான் ஆரம்பமானது. அவளது சுகத்தில் நான் 'என்னில்' எதையோ கண்டேன். எனது உத்வேகம் கூடியது போல உணர்ந்தேன். சீட்டி நூறு சதவீதம் உண்மையானவன் என்று எண்ணினேன். பிறகு, எனது எழுத்தில் கவர்ச்சியும் விரசமும் கூடியது. இருப்பினும், மனோரீதியாக ஏதோ இருப்பதாக விமர்சகர்களும் வாசகர்களும் கூறினார்கள். ராஜலஷ்மிதான் என்னைக் கண்டு குழப்பமடைந்தாளே தவிர, என்னைச் சார்ந்தவர்கள் குழப்பமடையவில்லை. ஒருநாள், ராஜலஷ்மி சொன்னாள்:

"உங்ககிட்ட, ஏதோ மாற்றம். ஏதாவது மனசுல கஷ்டமா...?"

அவளிடம் நான் என்னை மறைத்துக் கொண்டேன். குற்றவாளியாக உணரும் அதே சமயத்தில் நியாயவாதியாகவும் உணர்ந்தேன்.

இருபது, இருபத்தைந்து நாட்கள் கழிந்திருக்கும். இந்த நாட்களில் ஒருநாள்கூட வத்சலாவைப் பார்க்காமல் இருக்க முடியாதிருந்ததை எண்ணினேன். அவளுள் இருந்த வசீகரத்தையும் ஏதோ ஒருவித உந்துதலையும் எண்ணினால் வியப்பாயிருந்தது. ஒவ்வொரு நாளும் ஒருவித பொய்யாய் ராஜலஷ்மியிடம் நன்கு பொய் சொல்லப் பழகியிருந்தேன்.

வானம்...நிர்மலமாய் பூத்திருக்க, நிலவு சிறு கருப்புத் தடங்களோடு வெண்மையாய் காட்சியளித்துக் கொண்டிருந்தது. தூரத்து நட்சத்திரங்கள் துல்லியம் காட்டின. எனது வண்டி ஏழு கிலோ மீட்டர் வந்த அலுப்பில் மூச்சிரைத்து நின்றது. கதவைத் தட்டினேன். வத்சலா திறந்துவிட, உள்ளே நுழைந்தேன்.

மோகத்துடன் அவளைத் தீண்ட, சட்டென்று தடுத்தாள்.

''இனிமே நீங்க வரவேணாம்...!''

''என்ன?"

இனிமே என்னைப் பார்க்க வரவேணாம்...!''

''என்ன லூஸ் மாதிரி பேசறே...?''

''வேணாம் இனிமே. நீங்க பெரிய எழுத்தாளராமே...?"

''அதனாலென்ன...?'' எனக்கு பொசுக்கென்று கோபம் வந்தது.

''உங்களுக்கும் சீட்டியோட மோசமான முடிவு வேணாம்...!''

''உளறாத. பணம் தர்றேன், நீ வர்றே. என்னோட பர்ஸனல் வாழ்க்கைல தலையிட உனக்கு உரிமை கிடையாது...!''

''வேணாம். சீட்டி கதை உங்களுக்கும் வேணாம். கொஞ்சம் குடிச்சவர் நிறையக் குடிச்சார். அநியாயமா

போய்ச் சேர்ந்தார். நான் உணர்ந்துட்டேன். நீங்க ளெல்லாம் சமுதாயத்துக்கு ஏதோ செய்யறவங்க. செய்து கிட்டு இருங்க. சீரழிவுல போயிட வேணாம்...!"

''வத்சு...''

''என்னடா சினிமா மாதிரி நீதி போதிக்கிறாளேன்னு நினைக்க வேணாம். சீட்டியோட வாழ்வு தனி. அவர் தனி. உங்களுக்கு பொண்டாட்டி, புள்ளைன்னு குடும்பம் இருக்கு..."

எனக்கு வியர்த்தது. 'இவளுக்கு இதெல்லாம் எப்படித் தெரிந்தது?'

''...போயி, அவங்களோட சந்தோஷமா இருங்க. சீட்டி மாதிரி, 'நீ உணர்வுகளின் தூண்டல்'னு கவிதை படிச்சிட்டு இருக்காமே, உங்க பாதையில போங்க. இனிமே இங்க வர்றது உங்களுக்கும் எனக்கும் நல்லதில்லை..."

எனக்கு 'வெளியே போடா நாயே' என்று கூறுவது போல இருந்தது, கிளம்பினேன்.

வீடு. அழைப்பு மணியைத் தொடர்ந்து, ராஜலஷ்மி ஜன்னலைத் திறந்து முகத்தைப் பார்த்துவிட்டு கதவைத் திறந்தாள்.

''என்னங்க முக்கிய வேலைன்னு போனீங்க. அதுக் குள்ளவா முடிஞ்சுடுச்சு...?" கைகளைத் தூக்கி கூந்தலைப் பின்னால் சொருகிக் கொண்டு கேட்டாள். அவளைப் பார்க்க பாவமாக இருந்தது இப்போது. ஆனால், அவளது இயல்பான முகத்திலிருந்து என்னால் ஏதும் கண்டுபிடிக்க முடியவில்லை.

நமது தாயகம்
ஏப்ரல் 1993

*என்*
*உள்ளத்தின்*
*உள்ளே...*



அன்புள்ள ராஜ்,

சௌக்யமா? உன் மாலா, சின்னப்பயல்? உன் புருவங்கள்தாம் என் கண்முன்னே நிற்கின்றன, ராஜ்! எனக்கே பழுப்புநிற புருவங்கள்தான். ஆனால், உனக்கு எவ்வளவு கருமை நிறமான புருவங்கள்...

உன் புருவத்தைப் பற்றி மற்றவர்கள் பேசிய போது எனக்கு கோபம்தான் வந்தது. உன்னைப் பற்றி பேசுவதற்கு அவர்களுக்கு என்ன உரிமை யிருக்கிறது? நான்...நான் மட்டும்தான் உன் புகழை, ஸ்தோத்திரங்களைப் பாட வேண்டும்!

எனக்கு ஸங்கீத ஸாகரத்தை அளித்ததே நீ தானே! சரிகமபதனிசா...விலிருந்து, எட்டாத அளவிற்கு சங்கீதத்தை எனக்கு அருள் பாலித் தாய். உனக்கு என் முதல் குரு வணக்கத்தை அளிக்கிறேன்.

நான் அடுத்த மாதம் முப்பதாம் தேதியில், 'கம்பன் கலையரங்கில்' பாடப் போகிறேன். நீயும் மாலாவும், சின்னப் பயலோடு வரணும். என்னைப் பாராட்டி, நிறைகுறைகளை எடுத் துரைக்க வேண்டும்.

இறந்த கால நிகழ்ச்சிகளை நிகழ்காலத்தில் நினைத்தால் சிரிப்புதான் வருகிறது. நீ கேட்டது அறியாமையினால்தான் ராஜ்...!

நான் உணர்ந்து கொண்டேன். எனக்குச் செய்த உதவிகளுக்கு நீ, உன் 'ஆட்கொள்ளும் பருவத்தால்', "நான் உன்னை ரசிக்க வேண்டும் கௌசல்யா!"ன்னு சொன்னப்போ, அவ்வார்த்தைகளின் வாயிலாக எனக்கு உஷ்ணம் வரவில்லை. மாறாக கவிதைதான் அதில் தெரிந்தது. நான், உன்னால் இப்பொழுது நிறைய புதுக்கவிதைகளை எழுதி, பத்திரிகைகளுக்கு அனுப்புகிறேன் தெரியுமா!

'நம் நினைவுகள்...
பீனிக்ஸ் பறவைகள்!
அழிந்தவை...நமது
விலாசங்கள் மட்டும்தான்...!'

போதுமா சான்றுக்கு? அப்புறம், உன் மனைவி மாலா எப்படி இருக்காங்க? சின்னப் பயலுக்கு அதிகம் 'சாக்லெட்' வாங்கித் தராதே. கெட்டப் பழக்கம் அது!

கெட்டப் பழக்கம்னு சொல்றப்போ ஞாபகம் வரது. அப்பல்லாம் நீ அதிகமா சிகரெட் பிடிப்பே நான் ஒரு தடவை, "இதையெல்லாம் நிறுத்தினாத்தான் சங்கீதம் கத்துக்க வருவேன்'னு சொன்னேன். அன்னைக்கு விட்டது தானே? நான் சங்கீதம் கத்துக்க கத்துக்க...நீ என்மேலே காதலைக் கத்துக்கிட்டாய். நான் பாடினபோது என் 'பாவங்களை, நீ பார்க்கவில்லை. என் பருவத்தைத்தான் இரசித்திருக்கே ராஜ்! அதை உனது வாயிலிருந்து வந்த, அந்த வார்த்தையிலேயே தெரிஞ்சு உணர்ந்துகிட்டேன்.

உங்க ஊர் பிள்ளையார் கோயிலில் இந்த வருஷம் சிறப்பா கும்பாபிஷேகம் நடந்துதா? சிறப்பாதானே?

நான் எழுதினது எல்லாம் உன்னைக் குத்திக்காட்ட இல்லை. சத்யமா! நான் உன்னை ஏத்துக்கொண்டிருக்க

லாம். ஆனா...நான் அந்த சசிகுமரனை சந்திச்சிருக்காட்டா, நிச்சயம் உன்னைத்தான் ஏத்துட்டிருப்பேன். அப்ப சசிகுமரன் பூப்போலதானே இருந்தார்? இப்ப மிருகம் தெரியுமா? தினமும் குடிக்கிறார் சூதாடுறார். நான், விசும்பறதை பாடல்னு நினைச்சுகிட்டு... மத்தளம் போல ஈவு இரக்கம் இல்லாம அடிக்கிறார், தினமும் நரக வாழ்க்கை தான். ஆனா, நம்ம சங்கீதத்துல 'மாங்கல்ய பாக்கியம்'னு ஒரு அடி வரும் தெரியுமா? அதை வச்சுத்தான் அனுசரிச்சுப் போயிட்டிருக்கேன்.

செலவுக்கு காசெல்லாம் தரதில்லை. ஏதோ...நீ அருளின சங்கீதத்தால் 'லோக்கல்ல' பாட அழைப்பு வருது. அவர் இல்லாதபோது மூணு பேருக்கு சங்கீத உபன்யாசம் செய்ய றேன். மாசம் தவறாம அந்த மூன்று ஜனிப்புகளும் தட்சணை தரது. எப்பவாவது சங்கீத சபாவில தருகிற பணத்துல பாதியை எப்படியும் சசிகுமரன் வாங்கிக்கிறார், குடிக்கிறார். நான் ஒரு கல்லாத்தான் அவர்கிட்டே வாழறேன். நான் உன்னை அடைஞ்சிருக்கணும் ராஜ்!

'சீ! என்ன இவள் இப்படி எழுதறாளே'ன்னு முகம் சுளிக்கிறீயா? அதில்லை விஷயம். நீ அடிக்கடி நினைச்சுக்க லாம். 'என்னடா... ஒரு பொண்ணுகிட்டே அந்த மாதிரி கேட்டுட்டு, அவ ஒத்துக்கொள்ளாதது நமக்கு அசிங்கம் தானே' என்று! அதெல்லாம் தவறான கூற்று ராஜ்!

அது, நம் முன்னோர்கள் சொன்ன மாதிரி 'ஆட் கொள்ளும் பருவம்'தான் ராஜ்! எதுக்கும் அதிர்ஷ்டம் வேணு மில்லையா? அந்த அதிர்ஷ்டம், அழைப்பு' மணி அடிச்சுகிட்டு வர்றதில்லை. அதை அடைய ஒரு தகுதி தேவை தெரியுமா? ஒரு முரடனை முதல்லேயே அறியாதது நான் செஞ்ச பாவம்! சசிகுமரன் இப்படி இரட்டை மனிதனா இருப்பார்னு நான் நினைக்கலே. அதுக்கு ஒரு ரிக்ஷாகாரனுக்கு துணைவியா போயிருக்கலாம். கவிதையை, பாட்டை நிச்சயம் ரசிப்பான்.

அதுக்குன்னு சசிகுமரன் மேல நான் வன்மம் கொண்டிருக்கலை, நிச்சயமா!

இதெல்லாம் எதுக்கு எழுதினேன்னு கேட்பாய். என்னை அடுத்தமாதம் 'கம்பன் கலையரங்கில்' நீ பார்ப்பாய் அல்லவா? அப்போ, 'சௌக்யமா கௌசல்யா? ஏன் மெலிஞ்சு போயிட்டே?' போன்ற கேள்விகளை எல்லாம் எழுப்பக் கூடாது. நான் அதுக்கு பதில் சொல்லத் தெரியாம முழிக்கக் கூடாது. உனக்கே தெரியும்...நான் பொய்யே சொன்னதில்லைன்னு!

அப்புறம்...மன்னிக்கனும் ராஜ்! ஏன்னா...இந்த மடலை ஒருமுறை படிச்சுப் பார்த்தேன். எல்லா இடத்திலேயும் உன்னை...மீண்டும் மன்னிக்கனும். உங்களை மரியாதைக் குறைவா 'நீ', 'உன்'னு எல்லா இடத்திலேயும் எழுதியிருக்கேன்.

அது மரியாதைக் குறைவா எழுதினது இல்லை...உன்... உங்கள் மேலே உள்ள ஒரு அன்புதான் காரணம்; ஒரு உரிமைதான் காரணம். மற்றபடி, உங்கள் சௌக்யமும், மாலா, சின்னப்பயல் சௌக்யமும் அவசியம் தேவை.

உங்கள் அன்பு மாணவி,<br>கௌசல்யா (சசிகுமரன்)

பி.கு: அடைப்புக் குறியைப் பற்றி பெரிசுபடுத்தக்கூடாது.



ஜெமினிமலர்<br>மார்ச் 1988

## அண்ணனின் குதிரை

○

'பிராமணாள் ஆத்துல குதிரை வளர்த்துண்டு...! நன்னாயிருக்கு...!' என்று முகம் நொடிக்கும் பிரச்சினைக்கு முற்றுப்புள்ளி வைத்ததுபோல் நடந்துவிட்டது.

அண்ணன், குதிரை ஓடிவிட்டதால் இரண்டு நாட்களாக பச்சைத் தண்ணீர்கூடக் குடிக்காமல் வீட்டின் முற்றம் ஒட்டிய தூணோரத்தில் தலை வைத்து, மேற்கூரை ரயிலோடுகளை வெறித்த படி இருந்தார். பார்ப்பவர்களுக்கு ரயில் ஓடுகளை கண்கள் எண்ணிக்கொண்டிருப்பதுபோல தெரியும்.

சின்ன மன்னி, சர்வ ஜாக்கிரதையாக மூத்தவள் குழந்தைகளை குதிரையைத் தேடிவர ஏவினாள். இறந்து போன பெரிய மன்னிக்கு இரு பிள்ளைகள். எட்டு வருடங்களுக்குமுன் அவர்கள் சித்தியின் கொடுமை இலக்குக்கு ஆளாகவில்லை. இப்பொழுது ஒருத்தன் பத்தாம் வகுப்பு படிக்கிறான். மற்றவன் எட்டாவது. இப்பொழுது சித்தி இடும் ஒவ்வொரு சிறு ஆணையைக்கூட அவர்கள் ஏற்றுக்கொண்டு கர்ம சிரத்தையாய் செய்யத் தயார்!

"உங்க தோப்பனார்...தோப்ப...னார்...இழவு சனியன் ஓடினத்துக்கு தலைமுழுகிண்டு, ஊஞ்சல்ல ஆடாம, தரித்ரம் மாதிரி இருக்கா! ஜெயப்பிரகாஷ்! நீ வில்லினூர், மூல குளம் பக்கம் தேடு. ஈஸ்வரா! நீ டவுன் முழுக்க விசாரிச்சு... குதிரையோட வரணும்....!"

இரண்டு பேரும் கிளம்பினார்கள். பெரியவன், கையில் அறிவியல் கோனாரோடு தேடப் போனான். அவனுக்கு நாளை மறுநாள் பள்ளியிறுதித் தேர்வு. சின்னவன், மன்னி யின் குழந்தைகளைப் பார்த்தான். தம்பி விக்னேஷ் பிரம்பு நாற்காலியில் அமர்ந்திருந்தான். கையில் பாலமித்ராவை மடக்கிப் பிடித்து படித்தபடி, பாசிப்பருப்புசுண்டல் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். தங்கை பத்மஜா 'வாக்மென்' கேட்டுக் கொண்டிருந்தாள். பாட்டின் தாளத்துக்கு ஏற்ப சொடுக்குப் போட்டுக்கொண்டிருந்தாள். தாயைப் போல பிள்ளைகள். தந்தை சொல் மந்திரங்கள் 'யூஸ்லெஸ்' என்று அவர்கள் தீர்மானித்து அன்னையிடமே மந்திரங்களைக் கற்றுக் கொண்டவர்கள்.

முதலில், குலம் அண்ணனைத் தூற்றியது!

"குதிரை! பிராமணாள் ஆத்துல. பேஷ்...!"

அப்பா, ரங்கபிள்ளை வீதியில் வநதுகொண்டிருப்பார். எங்கிருந்தோ ஒரு குரல் வரும்.

"என்ன ஓய், வேம்பு ஐய்யர்வாள்! உம்ம ஆத்துக் குதிரைக்கு தடுப்பூசி போட்டீரோ...?" குத்தூசியாய் ஒரு தாக்குதல். மார்க்கெட்டுக்கு வந்திருந்தவர்கள் அனைவரும் அப்பாவை திரும்பிப் பார்த்தார்களாம்!

அப்பா, அண்ணனைக் கிணற்றடியில் வைத்துக் கேட்டார்:

"தோ பாருடா, தாமு! நாம ஒண்ணும் அட்சர சுத்தம் பாக்க வேண்டாம். சாதியில அவா அவா குற்றம் செய்யறா... ஒப்புத்துக்கறேன். இருந்தாலும், குதிரை வளர்ப்பானேன்?

ஊருல, குல கோத்திரத்துல நம்ப ஆத்துப் பேச்சுதான். நோக்கு தெரியாததில்ல. அந்தக் குதிரைய ஏண்டா வச்சுண்டிருக்கிறே...?''

என்னவோ தெரியவில்லை. அண்ணனுக்கு குதிரையிடம் அப்படியொரு ஒட்டுதல். யாரோ ஒருவர் குறைந்த விலைக்கு குட்டியாகக் கொடுத்தாராம். அண்ணன் 'ரொம்ப சீப்பா இருக்கே!' என்று வாங்கிக்கொண்டு விட்டாராம். கழுதைக் குட்டி போன்று இருந்தது. ஐந்தாறு வருடத்திலேயே 'குதிரையாய்' ஆகிவிட்டது. குதிரையை வீரமாய் சர்வ சாகசங்களோடு பழக்கினால் ஒரு புண்ணியம், அல்லது வண்டி இழுக்க பழக்கினாலும் புண்ணியம். 'அதுக்கா வாங்கிண்டு வந்தேன் என் தங்கத்தை?' என்பார் அண்ணன்.

குதிரை சில விஷயங்களில் மட்டும் பயன் தந்திருக்கிறது. வளர்ப்பவனுக்கு அல்ல. அண்டை விட்டுக்காரர்களுக்கு! புதிதாய் வீடு கட்டுபவர், தனது 'செப்டிக் டேங்க்' விஷயத் திற்கு குதிரை சாணம் வாங்கிக்கொண்டு போவார். அதில் அறிவியல் சார்ந்த உபயோகம் இருந்தது. சேரக்கூடிய அசுத்தங்கள் 'ஸ்வாகா' ஆக இச் சாண அடிமட்டம் உதவு கிறது. எப்படி? சாணம் அழுகி, மட்கி புழுக்கள் உருவாகும். புழுக்கள் அசுத்தம் உட்கொண்டு உள்புறத்தை தூய்மைப்படுத் தும். குதிரைச் சாணப் புழுக்கள் இதில் புகழ்பெற்ற வீரர்கள்! அப்புறம், குதிரையைக் காட்டி குழந்தைகளைச் சாப்பிட வைத்தவர், பயமுறுத்தியவர் பலர். பத்து வயது வெங்கிடு ஓவியத் திறமை மிகுந்தவன். அவன் பத்தடி தள்ளியமர்ந்து குதிரையைப் பார்த்து 'ஸ்பாட் ஸ்கெட்ச்' செய்தான்.

குதிரை, அண்ணனை மட்டும் அன்பாய் புன்னையிலை போன்ற நாக்கை வெளியே கொணர்ந்து நக்கிக் கொடுக்கும், பெரும்பாலும் முழங்கையை. அண்ணன் அணிந்திருக்கும் விபூதிப் பட்டைகள் கலைந்து அந்த இடமே ஈரமாகிவிடும்.

அப்பா, 'கர்மம், கர்மம்!' என்று தலையிலடித்துக் கொள்வார்.

அண்ணன், குதிரையின் பிடரியில் விரல்களைப் புகுத்தி கோதிவிடுவார். அது வாலை, பருவப் பெண்ணின் சடையைப் போல ஆட்டும், மினுமினு பழுப்பு உடம்பை சிலிர்த்தபடி குலுக்கிக்கொள்ளும். அண்ணனை நிமிர்ந்து பார்க்கும். வாயைத் திறந்து புளியங்கொட்டை போன்ற பற்களைக் காட்டும். சிரிப்பு போலிருக்கிறது. அண்ணன், முதல் தாரக் குழந்தைகள் வெட்டிக்கொண்டு வந்த புல் கட்டுகளிலிருந்து கத்தை கத்தையாய் உருவி குதிரையின் வாயில் திணிப்பார். அதன் வாயிலிருந்து மெல்லுவதால் உண்டாகும் வெண்பச்சை நுரையைக் கண்டு பூரித்திருப்பார். சில சமயம் ஆட்காட்டி விரலில் நுரைத் துணுக்கை எடுத்து முகத்துக்கு நேராக வைத்து சிறிது ரசிப்பார். பிறகு, உதடு குவித்து ஊதுவார். சிறுசிறு துணுக்குகளாய் அது காற்றில் சிதறுவதைக் கண்டு களிப்பார்.

அந்தக் குதிரைக்கு தான் 'யானையென்ற' கர்வம். மதர்ப்பாய் நின்றுகொண்டிருக்கும். தன்னைக் கட்டிப் போட்டிருக்கும் பூவரசுமரத்தை வெறிக்கும். அண்ணன் தான் இருக்கும்போது மட்டும் கட்டை அவிழ்த்துவிடுவார். குதிரை 'லாயத்தில்' விழுந்து புரளும். அப்படி புரண்டால்தான் அதற்கு செரிக்குமாம்! அதன்பிறகு மறுபடி கட்டிப்போட்டு போய்விடுவார். அடிக்கடி தப்பிக்க வழியிருக்கிறதா என்பது போல பக்கவாட்டில் திரும்பிப் பார்க்கும். அதற்கு ஆதங்கம். அண்ணன்கூட கோர்ட்டுக்கு போக வேண்டும்போல துடிப்பு. அண்ணன் சினிமாவுக்கு கிளம்பினால் தானும் உடன்வர நிற்பதுபோல குதித்து 'அலம்பல்' செய்யும். அதற்கு அண்ணனைத் தவிர மற்றவர்கள் பரம எதிரி.

ஆசையோடு புல் கடிக்கக் கொடுத்தால் கையையோ, தொடையையே கடித்து 'ருசி' பார்த்துவிடும். ஒரு தடவை கொள்ளு வைக்கப்போன சின்ன மன்னியைப் பதம் பார்த்து

விட்டது. மன்னி, வெள்ளி நீராடி கூந்தலை 'ரெண்டுங் கெட்டானாய்' முடிந்திருந்தாள். குனிந்தவளின் கூந்தலை குதிரை வாய் வைத்து கொத்தாகப் பிடித்துக்கொண்டது. மன்னி அலறிய அலறலில் வேதம் ஓதிக்கொண்டிருந்த அப்பா, தனது 'கேஸுக்காக' ஆதாரம் தேடிக்கொண்டிருந்த அண்ணன், குளித்துக்கொண்டிருந்த விக்னேஷ்வர், பத்மஜா, அரையிறுதிப் பரீட்சைக்கு படித்துக்கொண்டிருந்த மூத்தாள் குழந்தைகள் எல்லோரும் ஓடிவந்தார்கள். அம்மா காரைக் குடிக்கு பெண்வீட்டுக்குப் போயிருந்த சமயம் அது.

எல்லோரும் குதிரையை நோக்கி முன்னேறினர். அண்ணன், விரைந்தபடியே "ரிச்சீ..." என்று குரல்கொடுக்க, குதிரை சட்டென்று வாயைத் திறந்து மன்னியை விடுவித்தது. விடுபட்ட மன்னி ஆத்திரம் பொங்க கையில் வைத்திருந்த பித்தளை 'ஆனைமண்டை' பாத்திரத்தால் குதிரையின் பிடரியில் 'மொட்டென்று' ஒரு போடு போட்டாள். குதிரை ஒரு மாதிரி கனைத்துக்கொண்டு சகலமும் அதிர்ந்து நகர்ந்தது. அதற்குள் வந்து சேர்ந்த அண்ணன், மன்னி குதிரையை அடித்ததைப் பார்த்தாரோ...இல்லையோ..."முண்டை...!" என்று எல்லோர் முன்பும் அவளை வைதபடி அவளது கழுத்தைப் பிடித்து இழுத்து கன்னத்தில் நான்கு விரல்கள் பதிய ஒரு அறை கொடுத்தார்.

அதற்குப் பிறகு, ஒரு வாரம் குடும்பத்தில் பனிப்போர். மௌனவிரதம். மன்னி அதிலிருந்து ஒன்று யூகித்துக்கொண்டாள். கணவனுக்கு குதிரையென்றால் உயிர் என்று. அதன் பிறகு அவள் குதிரை சம்பந்தமாக எதுவும் வைத்துக்கொள்வதில்லை. குதிரை, மன்னியைப் பார்த்தாலே கடுகடுவென்று தொண்டையைச் சிணுங்கும்.

குதிரை ஒரு தடவை பத்மஜாவை உதைத்திருக்கிறது. குழந்தை ஒரு வாரம் காய்ச்சலில் படுத்திருந்தாள். மூத்தாள்

குழந்தைகள் கடிபட்டிருக்கின்றனர். அண்ணன் குதிரைக்குத் தான் முதலில் தடுப்பூசி போட்டார்.

சில நேரங்களில் குதிரை அதிதீவிரமாய் நின்று யோசிக்கும் பாவனையில் நின்றுகொண்டிருக்கும். அறுத்துக்கொண்டு ஓடிவிடும். உள்ளூரில் ஏரி, குளம், அடர்ந்த மரப்பகுதிகளுக்கு மத்தியில் நின்று கொண்டிருக்க, அண்ணனோ அல்லது மூத்தாள் குழந்தைகளோ தேடிக் கண்டுபிடித்து வந்திருக்கின்றனர். குதிரை முறுக்கிக்கொண்டு 'புக்ககம்' வந்து சேரும்.

திலாசுப்பேட்டையைச் சேர்ந்த ஒரு குதிரைவண்டிக் கிழவர் அண்ணனின் குதிரையை விலைக்குக் கேட்டுப் பார்த்தார். அப்பா அதற்கு ஒத்து ஊதினார். அண்ணன் குதிரையைக் கட்டிப்பிடித்துக் கொண்டு, ''மாட்டேன்...'' என்று சொல்லிவிட்டார். பிறகு, 'வாடகைக்காவது தர முடியுமா' என்று கேட்கப்பட, அண்ணன் திட்டவட்டமாக மறுத்து விட்டார்.

அண்ணன் சில சமயம் குதிரையை, ''ஒடுக்காலிக் கழுதை'' என்று செல்லமாய்க் குத்தியபடி கொஞ்சுவார். குதிரை புன்னகைக்கும். அவர் குதிரை வளர்ப்பதின் புகழ், எட்டுத்திக்கும் பரவியிருந்தது. காரைக்குடி, திருச்சி, நாகப்பட்டினம், ஆமதாபாத்...என்று சர்வ சொந்தக்காரர்களுக்கும் இவ்விஷயம் அவல். அப்பா இந்த ஊர்களுக்குப் போனால் போதும். 'ஆத்து' விசாரிப்புகளோடு குதிரையையும் விசாரிப்பர். அப்பாவின் ரோஜா முகம் கறுத்துவிடும்.

குதிரை வளர்ப்பினால், சின்ன அண்ணனுக்கு வரவிருந்த 'வங்கிப் பெண்' வரன் ஒன்று தப்பிவிட்டது. 'பிராமணான் ஆத்துல குதிரை! எங்காத்துப் பெண் கொன்னு சுண்டல்தான் செஞ்சுப் போடணும்...!' என்று நையாண்டி செய்து நிராகரித்து விட்டனர்.

பிள்ளைகள் சோர்ந்துபோய் திரும்பிவந்தார்கள். எங்கும் 'குதிரைத்தடம்' தெரியவில்லையாம். மன்னி அவர்களை ஏசும் சாக்கில் அண்ணனையும் சேர்த்துக்கொண்டாள்.

அண்ணன் இதுவரை திருக்கனூர், சுல்தான்பேட்டை என்று சுற்றிக் களைத்து திரும்பியிருக்கிறார். குதிரை எங்கே தான் போனதோ' தெரியவில்லை.

ஊர்சுற்றியலைந்து வந்த பிள்ளைகள் பழைய சோற்றை ஆவலோடு உண்டனர். மன்னி, அண்ணனுக்கு கொஞ்சம் 'மோருஞ்சாதம்' பிசைந்து எடுத்து வந்தாள். அவரோ தொட வில்லை. 'ரிச்சி வந்ததும்தான் போஜனம்' என்று நிராகரித்து, மோட்டுவளை நோக்குதலைத் தொடர்ந்தார், வீடே ஒருவித மயான அமைதியைக் கொண்டிருந்தது. குடும்ப உறுப்பினர் கள் எவ்வளவோ ஆறுதல் சொல்லியும் அண்ணனின் போக்கு மாறவில்லை. அண்ணனுக்கு குதிரைக் கவலை. குடும்பத் தார்க்கு அண்ணனைப் பற்றிக் கவலை.

அண்ணன் சுற்றூர் நண்பர்களுக்கு தந்தி அடித்திருந் தார். அவர்களிடமிருந்தும் 'ஸாரி. நாட் அவெய்லபிள்' என்று மறுதந்தி வந்துவிட்டது. அண்ணன் இன்னும் சோகமானார் 'அல்ஜீப்ராவில்' சந்தேகம் கேட்க சூழ்நிலை தெரியாது வந்து நின்ற பத்மஜாவை இழுத்துப்போட்டு சாத்து சாத்தென்று சாத்தினார். பத்மஜாவின் அலறல் வீட்டிற்கு சுத்தமான 'சோகக் களையைக்' கொடுத்தது.

மூன்றாம் நாள். காலை முதல் அக்கம்பக்கத்தினர் குழும ஆரம்பித்து விட்டனர். குதிரையைப் பற்றிய விசாரிப்புகள். சந்தடி சாக்கில் சாப்பிடாத அண்ணனை மறைமுகமாக 'பைத்தியக்காரன்' என்றனர். அப்பாவுக்கோ தர்மசங்கடம். இப்படியே இருந்தானானால் அவனுக்கு 'வக்கீல்' என்ற மரியாதை விலகி, 'லூஸ்' என்று பட்டம் கொடுத்துவிடுவர் என்று அஞ்சினார்.

ஊர், மட்டமான எண்ணம் கொண்ட ஊர். இதெல்லாம் அங்கு வாழும் மக்களுக்கு இலவசமான ரப்பர் அவல். நன்கு

அரைத்துத் தள்ளுவார்கள். எல்லோரும் அகன்றதும் அப்பா தொப்பை ஆட சத்தம் போட்டார். பிறகுதான் அண்ணன் இரண்டு தோசை சாப்பிட்டார். மறுபடி குதிரைத் தேடலி முயற்சியில் வெளியே கிளம்பினார். அண்ணன் போவதைப் பார்த்து மன்னியால் பெருமூச்சுதான் விட முடிந்தது.

'குதிரை லாயம்' வெறிச்சோடிக் கிடந்தது. முந்தாநாள் வேகவைப்பதற்காக ஊற வைத்திருந்த கொள்ளு முளைவிட்டிருக்க, மன்னி மரத்தடியில் கொட்டினாள். குதிரை கடித்து விட்டுப் போட்டிருந்த சில முள்ளங்கித்துண்டுகள் வதங்கிப் போயிருந்தன. மரத்தடி மூலையில் வதங்கிப் பழுப்பேறிய புல் கட்டுகள். மன்னிக்கு குதிரை இல்லாதது சற்று நிம்மதி கொடுத்தாலும் கணவனின் போக்கைக் கண்டு அதனைக் காணாதது வருத்தமாய்தான் இருந்தது. 'என்ன மனிதர் இவர்!' என்று உள்ளுக்குள்தான் அவளால் கேட்டுக்கொள்ள முடிந்தது.

அண்ணன் கடலூர் சென்றார். நண்பர்களிடம் சொல்லி வைத்தார். போலீஸ் ஸ்டேஷனில் ஒரு 'புகார்' எழுதிக் கொடுத்தார். திருவந்திபுரம் அருகில் வக்கீல் நண்பர் சுந்தர் ராஜனைக் கண்டார். தொழில் முறை நண்பர்கள். ஒரு காலத்தில் ஒன்றாகப் பயிற்சி எடுத்தவர். அண்ணன் பரஸ்பரம் விசாரித்தார். சுந்தர்ராஜன் அலுத்துக் கொண்டார்: "வெரி, வெரி பேட் புரொபஷனல், தாமு...! கண்ட கேஸு நம்ம தலையில விழறது, நாய்ப் பொழப்புதா... பைசா புண்ணிய மில்ல! இன்னிக்கு காலையிலகூட ஒரு பெக்கூலியர் கேஸ். லாரிக்காரன் ஒருத்தன் கடலூர் ஒ.டி.கிட்டே ஒரு குதிரை மேல மோதி..."

அண்ணன் இரண்டு மணிக்குச் சோர்ந்துபோய் வீடு திரும்பினார். மன்னி, ''என்னா எல்லா இடத்திலேயும் தேடினேளா...?'' என்று பரிவாகக் கேட்டாள். அண்ணன் உதடு பிதுக்கி, இரண்டு கைகளையும் தோளுக்குமேல் உயர்த்தி, ''ரிச்சி போயிடுத்து வத்சலா...!'' என்று உணர்த்தினார். திடீரென்று அவரது சிவந்த கண்களி லிருந்து 'பொலபொலவென்று' கண்ணீர். ●

## வாழ்க்கையின்
## முகவரி

○

'ராஜலஷ்மிதானா அது!' சற்று ஆழமாய் பார்த்தபோது, அவள் கையைத் தூக்கி, ''ஹாய்...காந்த்!'' என்றாள். நான் மகிழ்ச்சி யோடு அவளருகில் சென்றேன்.

சிங்காரத்தோப்பில் வழக்கமான கூட்டமில்லை! இப்பொழுதுதான் கடைகளைப் பரப்பிக்கொண் டிருந்தார்கள். குடைகள் தலைகீழாக விரிக்கப் பட்டு, அதில் வண்ண வண்ண கைக்குட்டை களை நிரப்பத் தொடங்கியிருந்தார்கள். மலைக் கோட்டையின் உச்சியில் சில மனிதக் கோடுகள் தெரிந்தன. பெரிய பெரிய ஜவுளிக் கடைகள் தள்ளுபடி விற்பனையை செலவு செய்து எழுதி யிருந்தன.

''எங்கே இந்தப் பக்கம்?'' என்று கேட்டாள் ராஜலஷ்மி. அவளது நீண்ட விரல்களைப் பிடித்தபடி ஒரு சிறுவன். மூன்று வயதிருக்கும். என்னை கேள்விக்குறியோடு பார்த்தான்.

''எப்போ அந்தமான்லேந்து வந்தீங்க?'' என்று கேட்டவளிடம்,

''வந்து ஒரு வாரமாகுது. எப்படி இருக்கீங்க? ஆமா, இது யாரு?'' என்றேன் சிறுவனைச் சுட்டிக்காட்டி. அவன் அவளது கால்களை இறுக்கிக்கொண்டான். மறுபடி மிரட்சியோடு, 'யார் இந்தப் புது முகம்?'' என்று பார்த்தான்.

''ஸாரி. உங்களுக்கு 'இன்விடேஷன்' அனுப்ப முடியலை. உங்க ஹோட்டல் அட்ரஸ் தேடிப் பார்த்தேன். கண்டுபிடிக்க முடியலை. இது...என்னோட பையன்தான். பாரத், அங்கிளுக்கு ஷேக்ஹேண்ட் குடு...!" என்றாள்.

சிறுவன் தனது பிஞ்சுக் கைகளைக் கொடுத்தான். கொத்தாய்ப் பிடித்து, தூக்கி முத்தம் கொடுத்தேன். அவனுக்கு திடீரென்று என்மீது ஒரு நேசம் பிறந்தது. மோனலிஸாப் புன்னகை புரிந்தான்.

''வாங்க, ஏதாவது சாப்பிடலாம்!" என்றேன்.

''ஐயோ, பரவால்லை..." என்றவளை, மறுத்து அந்த 'ரெஸ்ட்டாரெண்டுக்குள்' அழைத்துப் போனேன். அமர்ந்து கொண்டோம். சர்வர் 'ஆர்டர்கள்' குறித்தார்.

''தென்...?" என்றாள், ராஜலஷ்மி.

''மூணு வருஷத்துக்குப் பிறகு வந்திருக்கேன். இப்பதான் லீவு கிடைச்சுது..."

''மூணு வருஷத்துக்குப் பிறகு விடுதலையா! அந்த மான்லே பெரிய ஜெயில் இருக்காமே...?" என்று சிரித்தாள்.

அதே சிரிப்பு, விஸ்தாரமாய் ஒரே அளவில் உதடுகள் மேலும் கீழும் விலகி, கண்களிலும் சந்தோஷம் மின்ன சிரிக்கக்கூடிய அலாதியான சிரிப்பு. பற்களின் வரிசைகளிலிருந்து தப்பி, ஒரு பல் மட்டும் முக்கோண வடிவில் அமைந்திருப்பது அவளது அழகின் சிறு அங்கம்.

நானும் சிரித்தேன். ''ஆமா, பெரிய ஜெயில்...பார்த்தா பயமா இருக்கும்...!" என்றேன். சிறிது அமைதி. பிறகு, ''ராஜலஷ்மி, என்னோட அட்ரஸ் தெரியாதுன்னு பொய் சொல்றீங்க! எங்களோட ஹோட்டல் பெரிய குருப் சார்ந்தது. அந்த நிறுவனத்தோட ஹோட்டல்னு போட்டிருந்தா நொடியில கிடைச்சிருக்கும்...!''

''ஸாரி காந்த்! உண்மையா சொல்லப்போனா கூப்பிட முடியலை. ஒரு அவசரமான கல்யாணம் எங்களோடது. சொல்லப்போனா, பத்திரிக்கைகூட அடிக்கலை. பத்து நண்பர்கள் முன்னிலையில் கல்யாணம்; நூறு பேருக்கு வரவேற்பு விழாத் தகவல். தட்ஸ் ஆல்...!''

''கணவர் என்ன செய்யறார்...?'' என்றேன்.

''ஸேல்ஸ் ரெப்! ஊர் ஊரா சுத்தி, வாஷிங்மெஷின் ஆர்டர் பிடிக்கிற வேலை. பெரிய கம்பெனிதான்! காதலிச்சுக் கல்யாணம் பண்ணிகிட்டோம். இப்போ விவாகரத்துக்காக காத்துக்கிட்டிருக்கோம்...!''

''என்ன சொல்றீங்க, ராஜலஷ்மி?''

''அதெல்லாம் வேணாம், காந்த்! நீங்க உங்களைப்பத்தி சொல்லுங்க. கடைசியா 'மல்லிகை' மாத இதழ்ல உங்க கதையைப் படிச்சேன். எப்படி போய்கிட்டு இருக்கு உங்க இலக்கியப் பணியெல்லாம்? எந்தெந்த பத்திரிக்கைக்கு கதை களை அனுப்பிச்சிருக்கீங்க? எனக்கொரு சந்தோஷம் என்ன தெரியுமா? உங்க பேரை பத்திரிக்கையில பாக்கறப்போ, 'நம்ம ஆளு பெரிய ஆளா இருக்காரேங்கிற' சந்தோஷம் எனக்குத் தாள முடியாது...!''

''என்னாச்சு? ஏன் டைவர்ஸ்... விவாகரத்து... அது இதுன்னு? என்னாச்சு...?''

''வேணாம், காந்த்! என் பிராப்ளம் என்னோடு போகட் டும். ரொம்ப நாள் கழிச்சி சந்திச்சிருக்கோம். எப்படி போகுது உங்க ஹோட்டல் லைன்...?''

''ம், சுவராஸ்யமான வாழ்க்கைதான். நடுவில் சில பிரச்சினைகள்; போராட்டங்கள் வரும். உங்களுக்குத் தெரியாததா? ஆமா, இப்ப நீங்க எந்த ஹோட்டல்ல வேலை செய்யறீங்க?''

''வேலையை விட்டு நிறுத்திட்டார். ஹோட்டல் வர வேற்புத் தொழிலைப்பத்தி நாம படிச்சு, பட்டம் வாங்கி, ஒரு பயபக்தியோடதான் பணிபுரிய வர்றோம்...'' அவள் சொல் லிக் கொண்டிருக்கும்போது, சர்வர் சூடான சமோசாவும் சிறுவனுக்கு ஐஸ்கிரீமும் கொண்டு வந்தார்; பரிமாறினார். ராஜலஷ்மி தொடர்ந்தாள்:

''ஹோட்டல் வரவேற்பையும் ஒரு பணியா மதிக்காம, பச்சையா இன்னைக்கு எவன்டி கூப்பிட்டான்னு அறைஞ்சார். வர்ற கெஸ்ட்டுக்கு முன்னாடி 'உர்ருன்னா' நிக்க முடியும்? எல்லார்கிட்டேயும் சிரிச்சு பேசனும், ரூம் குடுக்கனும், தகவல் தரனும். நம்ம வேலை அப்படி! அவர் அதை புரிஞ்சுக்கலை. தினமும் அடி, திட்டுதான்! விட்டுக்கொடுத்துடலாம்னு நானும் சரின்னு வேலைக்குப் போறதை நிறுத்தினேன்...."

சிறுவன் அவளது மடியில் ஏறிக்கொண்டு, ஐஸ்கிரீம் உதடுகளில் வழிய தின்றுகொண்டு, மேசையின் மேலிருந்த வண்ணப் பூக்களின் வரைவுகளின்மேல் விரல்களால் வரைந்து கொண்டிருந்தான்.

''சாப்பிடுங்க காந்த்!'' என்றாள்.

''ராஜலஷ்மி. உங்களுக்கா இப்படி!'' என்றேன் அதிர்ச்சி யாய். எனக்குப் படிக்கும்பொழுது அவளோடு பழகிய நாட்கள் ஞாபகத்துக்கு வந்தன. 'அப்பொழுதுதான் ராஜலஷ்மி எப்படி இருந்தாள்?'

ராஜலஷ்மியால் எங்கள் கல்லூரியே பொன்னென ஒளி வீசியது. அழகு என்றால் அழகு. அப்படியொரு அலட்சிய மான அழகு. ஒவ்வொரு நாளும் அந்த முகத்தில் ஒரு அழகு.

ஒரு பெண்ணை மொய்க்கும் குணம் அங்கும் இருந்தது. அதற்கெல்லாம் இடங்கொடுக்கவில்லை அவள். தான்

பாட்டுக்கு வருவாள்; பயில்வாள்; போவாள். எங்களது பிரிவில் என்னை மட்டும்தான் அவளுக்குப் பிடிக்கும். இலக்கியங்கள் பற்றிப் பேசிக்கொண்டிருப்போம். பின்னாலுள்ள கண்கள் பொறாமையாய்ச் சுழலும்.

அவளுடன் பேசிவிட்டு, நண்பர்கள் வட்டத்தில் வரும் போது இடித்துரைப்பார்கள்.

''பாண்டிச்சேரின்னாலே ஒரு மயக்கம்தா போ...'' என்பான் சார்லஸ் கண்களைச் செருகியபடி. நான் பாண்டிச்சேரியிலிருந்து திருச்சிக்கு குடிபெயர்ந்தவன்.

''என்னடா, இந்தியாவோட பிரச்சினையை எல்லாம் எப்படி போக்கறதுன்னு பேசித் தீர்த்துட்டீங்களா?'' என்று கேட்டான் சீனிவாசன்.

''எலே, நானும் பாக்கறேன், அவகிட்டே போயி பேசறத்துக்கு தினமும் எப்படிதான் விஷயம் கிடைக்குதோ? மச்சம்டா இவனுக்கு. அங்கே போய்...டெஸ்க்குல சாஞ்சு நின்னுகிட்டு...'போஸ்' கொடுத்துவிட்டு, கண்ணாடியை அடிக்கடி மூக்குல தள்ளிவிட்டுக்கிட்டு இருக்கிறதைப் பார்த்துட்டு குட்டி வலையில விளுந்துட்டா...!'' என்ற அறிவழகன் உட்பட அனேகம் பேருக்கு 'ழ' ஒழுங்காக வராது பேச்சைப் போலவே!

நான் எல்லாவற்றையும் ஒரு புன்னகையில் தாங்கிக் கொண்டு, ''ஏண்டா, இப்படி பேசறீங்க? ஏதோ பொழுது போகுது. வாழ்க்கையில இலக்கியமும் ஒரு பகுதி. இலக்கியம் பற்றி பேசினா அலுக்காது. அவள்கிட்டே நிறைய விஷயம் இருக்குடா...!"

''அண்ணே, மன்னிச்சுகோங்கண்ணே...!" என்பான் சீனிவாசன்.

''நீ சொல்றதும் உண்மைதாண்டா. அவகிட்டே 'நிறைய்ய...விஷயம்' இருக்கு...!''

சற்றுக் கோபமாய் முறைத்தால்...

"நகர்ந்துக்கோ. நெருப்பைக் கக்கிறப் போறான்...!" —சார்லஸ்.

அவர்களுக்கு ஆதங்கம்தான். தங்களிடம் அணுகமாட்டேன் என்கிறானே என்ற ஆதங்கம். சிலசமயம், என்னைப் புகழ்ந்தும் பேசுவார்கள் அதிலும் கிண்டலிருக்கும்.

"இவனோட சிரிப்புதான் அவளுக்கு இவனைப் பிடிச்சுப் போச்சு போலிருக்கு...!"

"நெசமாவே ஜோடிப் பொருத்தம் கச்சிதம்..." — இது சார்லஸ்.

சீனிவாசன், என் தோள்களைப் பிடித்துக் கொண்டு ஒரு நாள் கேட்டே விட்டான்.

"காதல்தானே பண்ணுறே...?"

"ஒரு பத்து நிமிஷம் பேசினா காதலா? ப்ளீஸ், ஏன் அந்த நோக்கத்திலேயே பார்க்கறீங்க..? பிரெண்ட்ஷிப்னு வச்சுக்கக் கூடாது? நம்ப வாழ்க்கை ரயில் சினேகிதம்போல. தட்ஸ் ஆல்! இது கொஞ்சநாள் பழகிட்டு பிரியறது. அப்புறம் நான் எந்த ஊர்லயோ... அவ எந்த ஊர்லயோ...?"

"அவ உன்னோட ஊர்லதான்...!" என்று சார்லஸ் மறுபடியும் ஆரம்பித்தான்.

"உங்களைத் திருத்தவே முடியாது. தயவு செஞ்சு தனியா விடுங்க, என்னை...!"

"...லி ஒத்திக்கோடா, ஐயா கனவு காணப்போறார்...!"

கலைந்தார்கள்.

முகத்தைக் கைகளால் தாங்கிக்கொண்டு, கண்களை மூடி அமர்ந்திருந்தேன். எனது மனம் சங்கடப்பட்டது. 'இவர்களுக்கு ஏன் இப்படியே எண்ணம் போகிறது? பெண்ணும் ஆணும் பேசினால் பின்னால் நோக்கமிருக்கும் என்று ஏன் எண்ணுகிறார்கள்?'

''காந்த்...?''—ராஜலஷ்மி அருகில் நின்றிருப்பது கருப்பு நிழலாய்த் தெரிந்தது.

நிமிர்ந்தேன்.

''எப்ப வந்தீங்க...?" கேட்டேன்.

''இப்பதான். என்ன சிந்தனை...?''

''ப்ச்...ஒண்ணும்மில்ல. சும்மாதா...!''

''அவளை லவ் பண்றியான்னு கேட்டாங்களா?"

''என்ன...?"

''என்னை லவ் பண்றியான்னு கேட்டாங்களா?" என்று கேட்டவளின் விழிகளை நான் பிரமிப்புடன் நோக்கினேன். அவள் அழுத்தமாகக் கூறினாள்:

''ஆமாம்னு சொல்லிடுங்களேன்! இதுல என்ன கஷ்டம்? நம்ம மனசு நமக்குத்தான் தெரியும். நமக்குள்ள ஒளிவு மறைவு கிடையாது. ஏன் வீணா மத்தவங்ககிட்டேயிருந்து அல்லல் படணும்...?''

''என்னங்க நீங்க...?'' என்றேன்.

''ஆமாம், காந்த்! எதுக்கு அவங்க பேச்சை வளர்த்துகிட்டே போகணும்...? முற்றுப்புள்ளி ஒண்ணு வைச்சுட்டா நல்லது இல்லையா? அனாவசியமா எதுக்கு அவங்க ஊகங்களுக்கு இடங்கொடுக்கணும்...''

அப்புறம் அவன் கூறியதுபோலவே முற்றுப்புள்ளி வைத்தாகிவிட்டது. இப்பொழுது யாரும் எங்களைப் பற்றி பேசுவதில்லை. இப்பொழுது, ''எதுவும் ஹெல்ப் வேணும்னா கேளுடா...!" என்று உதவிபுரிய ஓடிவந்தார்கள்.

நாங்கள் பறவைகளாய் ஆனோம். எங்களுடைய நெருக்கம் அதிகமாகியது. ஒருவருக்கொருவர் உதவிக் கொண்டோம். குடும்பப் பிரச்சினைகளை பகிர்ந்துகொண்டதில், ஒரு தீர்வு கிடைத்தது. ஆனால், ராஜலஷ்மியின்

குடும்பத்தில் ஏற்பட்ட சம்பவத்திற்கு எதுவும் பரிகாரம் கண்டு பிடிக்க முடியவில்லை.

அவளது களையான முகத்திற்குப் பின்னாலுள்ள நிரந்தர சோகம், அவளது தந்தையால்தான் ஏற்பட்டது. அவளது தாயைப் பிரிந்து, யாரோ ஒரு பெண்ணுடன் அவருக்குத் தொடர்பு இருக்க, குடும்பத்தில் விரிசல் ஏற்பட்டுவிட்டது. பிரிந்தனர். அது வளரும் பருவத்தில் இருந்த ராஜலஷ்மிக்குள் ஆணிவேராய் ஊடுருவி, மனசுக்குள் புழுங்கி, தகப்பனாரின் ஸ்பரிசம், ஆதரவு அற்று மனதில் வைராக்கியம் பிறந்து, நிரந்தர சோகம் படிந்து...

"மனுஷ வாழ்வில எவ்வளவு கஷ்டம் இருக்கு பாருங்க, காந்த்! அம்மா என்னை, அண்ணனை வளர்க்க ரொம்பக் கஷ்டப்பட்டாங்க. அப்பா ரொம்ப மாசம் கழிச்சு, 'என்னை மன்னிச்சுடு காயத்திரின்னு ஒரு லெட்டர் போட்டார். அப்புறம் ஒருநாள் அவரோட அட்ரஸைக் கொட்டை கொட்டையா எழுதி, 'நம்ம பெண்ணுக்கு ஏதாவது செய்ய விரும்பறேன்'னு இன்னொரு லெட்டர். அம்மாவுக்கு அவரை மன்னிக்க முடியலை. எப்படி எங்களால் ஏத்துக்க முடியும்? அம்மா பாவம், எவ்வளவு நாள் அழுதிருக்காங்க தெரியுமா? இப்பவும் நினைச்சால் அழுதிடுவாங்க...!" ராஜலஷ்மிக்கு குரல் தழுதழுத்தது.

இறைவன் பிறப்பு கொடுக்கிறான். அப்பிறப்புடன் ஒரு சுமையையும் ஏற்றி வைத்து விடுவது ஏனென்று தெரியவில்லை. விதவிதமான சுமைகள். ஏற்றமும் இறக்கமுமாய்!

நான் நிகழ்காலத்திற்கு வந்தேன்.

"உங்க ஹஸ்பெண்ட் செஞ்சது ரொம்பக் கொடுமை...!" என்றேன்.

ராஜலஷ்மி, ஐஸ்கிரீம் சாப்பிட்ட குழந்தையின் வாயைத் தனது புடவை முந்தானையால் துடைத்தாள்.

''ம்...அப்புறம் எப்போ உங்களோட கல்யாணம்...?'' என்று கேட்டாள்.

நான் சிரித்தேன்.

''கல்யாணம்னாலே பயமாயிருக்கு, உங்களையெல்லாம் பார்த்தா. லவ் மேரேஜ்னு சொல்றீங்க, இப்ப டைவர்ஸ்னு சொல்றீங்க...வாழ்க்கைக்கு என்னதான் அர்த்தம்...?''

''தெரியலை. ஏதோ ஒருத்தரையொருத்தர் ஒரு விதத்துல விரும்பிடறோம். அவரோட வீட்டில ஹோட்டல் ரிசப்ஷனிஸ்டை கல்யாணம் பண்ணிக்காதேன்னு எதிர்த்தாங்க. மீறி மலைக்கோட்டையில மூணு முடிச்சு. முடிஞ்சு போச்சு. எவ்ரிதிங் ஓவர்! கொஞ்ச நாள்ல அவரும் சந்தேகப்பட ஆரம்பிச்சாச்சு. வேலையை விட்டுட்டு சமாளிக்கலாம்னு நினைச்சேன். திடீர் திடீர்னு வெளியூருக்குப் போறேன்னுட்டு உடனே வந்து கதவைத் தட்டியது வெறுத்துப் போச்சு. இது ரொம்ப அதிகம்னு தோணுச்சு...''

அவளது கண்களில் நீர்த்திரள்கள் கோர்த்தன.

''வர்ற மாசம் முறைப்படி எங்களுக்குள்ள பிரிஞ்சுடலாம்னு உத்தரவு வந்துவிடும். மறுபடி நம்ப வரவேற்புத் தொழிலை ஆரம்பிக்க வேண்டியதுதான்...!''

நான் மனசு கனக்க, ஒன்றும் பேசாமல் இருந்தேன். ''போகலாமா?'' என்றாள்.

''எஸ்...'' என்றேன்.

சிறுவன் மறுபடி என் கைகளில் தொற்றிக்கொள்ளச் சம்மதித்தான்.

''அந்தமான் தீவு எப்படி?'' என்று கேட்டாள் ராஜலஷ்மி.

''பியூட்டிபுல்! எக்கச்சக்கமான தீவுகள். அத்தனையும் ஒவ்வொரு அழகு. கடல்லே அதிகம் அலை இருக்காது. பச்சைப் பசேல்னு எங்கும் மரம், செடி, கொடி, பூக்கள்...புல்

வெளிகள்...அப்புறம், அற்புதமான கோரல்ஸ், பெரிய பெரிய தேங்காய்...''

''என்ன மெயின் லாங்வேஜ்...?"

''எல்லா மாநிலக்காரங்களும் இருக்காங்க, தமிழ்நாடு, கேரளா, கல்கத்தா, டில்லி, பஞ்சாப்னு விதவிதமான மக்கள். ஆனா ஒற்றுமை. அந்தமானுக்கு 'மினி பாரத்னு'கூட ஒரு பேர் இருக்கு. லோக்கல்ல ஹிந்தி புழக்கம் அதிகம். தமிழன் ஹிந்தியை பொளந்து கட்டுறான். அட்டகாசமா பாட்டு பாடறான்...'' என்றேன்.

ராஜலஷ்மி மறுபடியும் சிரித்தாள். கருஞ்சிவப்பு பஸ் ஒன்று வந்து நின்றது. ஏறிக்கொண்டாள்.

''காந்த், ஃப்ரீயா இருக்கும்போது வீட்டுக்கு வாங்க.... அம்மா பார்த்தா ரொம்ப சந்தோஷப்படுவாங்க...'' பையனைக் கால்களுக்கிடையில் நிற்க வைத்துக்கொண்டாள். கைகாட்டி புன்னகைக்க, பஸ் குலுக்கல்களோடு புகை கக்கி முன்னேறியது.

நான் வீட்டிற்கு வந்தேன். எனக்கு ராஜலஷ்மியைப் பற்றியே ஞாபகமாக இருந்தது. எல்லாம் ஒரு கனவுபோல் இருந்தது. 'சே, ராஜலஷ்மிக்கு இப்படி ஒரு முடிவா...? இது என்ன வேதனை? கொடுத்துவிட்டு, பறித்துக்கொண்டதுபோல. இறப்பைவிடக் கொடியது அவள் வாழ்க்கை...'

''சாப்பிட வரலையாப்பா?'' அம்மா கூப்பிட்டதும் நினைவுகளிலிருந்து மீண்டேன்.

''கொஞ்சம் நேரம் ஆகட்டும்மா...!'' எனக்குள் ராஜலஷ்மியின் சோகம் படிந்திருந்தது அழுத்தமாய். அம்மா மறுபடி சொன்னாள்:

''சீக்கிரம் சாப்பிட்டுடு. மூணரை மணிக்கு ராகுகால பூஜை செய்ய கோயிலுக்குப் போகணும். நீயும் வாப்பா. ஊரிலேந்து வந்து ஒரு கோயிலுக்கும் போகாம இருக்கே...!"

''சரி, சாப்பாட்டை எடுத்து வையுங்க...!'' நான் எழுந்தேன். விதவிதமான சமையல். இலை பரப்பி, அம்மா வகையாய் பரிமாறினாள். எனக்கோ இன்னும் ராஜலஷ்மியின் நினைவாக இருந்தது. ஏதோ சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்.

''ம்...என்ன யோசனை? சாப்பிடு...!'' சாப்பிடத் தொடங்கினேன். திடீரென்று, சமையலறை வாசலில் கொலுசு சத்தம் கேட்க, அந்தப் பெண் நின்றிருந்தாள். கையில் ஏதோ பாத்திரம்.

''மாமி, இதை அம்மா கொடுத்துட்டு வரச்சொன்னா. பால் பாயசம்...!'' அந்தப் பெண் அம்மாவின் கைகளில் கொடுத்து விட்டு, என்னைப் பார்த்து முகத்தில் வெட்கம்படர வைத்துக்கொண்டு ஓடினாள்.

''உனக்கு ஞாபகம் இருக்காடா? அவ பக்கத்து வீட்டு வத்சலா குட்டிதான். ஆளைப் பார்த்தியா தம்மாத்தூண்டு இருந்தது, எப்படி 'பட்டுன்னு' பீர்க்கங்காய் மாதிரி வளர்ந்துட்டா. உன்னைப்பற்றி நேத்து விசாரிச்சா, எத்தனை நாள் இருப்பார்னு கேட்டா!'' என்று அம்மா சொன்னாள்.

நான் சாப்பிட்டு முடித்து, காற்றைச் சற்று வாங்க ஜன்னல் பக்கம் வந்தேன். மறுபடி ராஜலஷ்மி என்னுள் வியாபித்தாள். வெளியே பார்க்க, பக்கத்து வீட்டு ஜன்னலில் அந்தப் பெண், வத்சலாவின் முகம் ஆர்வமாய் என்னைப் பார்த்தது. எனக்குள் ஏதோ தோன்ற, பட்டென்று ஜன்னல் கதவை அடித்துச் சாத்தினேன். ●

## ஒற்றுமையுள்ள வேறுபாடுகள்

○

இன்னும் மீதி இருளிருந்தது. விடிவதற்கு அரைமணியாகும். ரமணன், மேலும் இதற் கும் அதற்குமாய் இரண்டு 'டிரிப்புகள்' ஓடி வந்தான். மூச்சு இரைத்தலுடன் வியர்வை அரும்புகளாய் முளைவிட்டது. நின்று, கை களை உதறி பயிற்சிகளை செய்தான். சூரியன் உதயமாகும் இடத்தை 'அவுட்லைன்' கொண் டிருந்தது வானம். சீராய் வரும் அலைகள்... தூரத்துப் புள்ளிவிளக்குடன் கூடிய மீன்பிடிப் படகுகள்...உலகம் இயங்க ஆரம்பித்துவிட்டது. ரமணன் தன் பின்னேயிருந்த கற்குவியல்களில் தானும் ஒன்றாகி, அமர்ந்து கொண்டான். 'சத், சத்' என்று உப்புக் காற்றும் கவுச்சல் வாசனையுமாய் மூக்கிற்கு எட்டியது. மனதி னுள் குடும்பம் வந்தது.

''இன்னைக்கு சாயந்திரம் வரும்போது 'கிரைப் வாட்டர்' வாங்கிகிட்டு வாங்க...''

''அப்பா, அடிக்கடி பென்சில் ஊக்கு ஒடஞ் சுடுது. வேற நல்ல பென்சில் வேணும்...''

''ஏங்க, வசந்திக்கு உள்பாவாடை வீணா கிடுத்து. ஒண்ணு புதுசு எடுத்தாகணும்...''

மூவராய் வாழ்ந்தபோது போதுமானதாக இருந்த பொருளாதாரம், மேலும் மூன்று சேர்ந்துவிட, ஆட்டங்கண்டு விட்டது. அம்மாவால்தான் இதெல்லாம் ஆயிற்று.

இரண்டுக்கு மேல் நிறுத்தியாகி விட்டது. முதல் குழந்தைக்கு மூன்று வயதானபோது, இன்னொன்றுக்கு வத்சலா தயாரானாள். பிறந்தது, பெண் குழந்தையாய் பிறந்தது. வத்சலா சந்தோஷப்பட்டாள்.

''நல்ல வேளைங்க. ஒரு ஆண்; ஒரு பெண்...'' அவன் அந்த நிமிடத்தில் சிரித்தாலும், மனசு 'பெண்' என்றது.

ரமணனுக்கு தலையை இலேசாக வலித்தது. கரையில் நிறையபேர் ஓடிக்கொண்டும் குதித்துக் கொண்டும் இருந் தார்கள். சிலர், உப்பு நீரில் நீச்சலடித்து கும்மாளமாகக் குளித்துக் கொண்டிருந்தனர். 'ஓ இவர்கள் மகிழ்ச்சியாய் இருக்கிறார்களோ? இருக்காது. என்னைப்போல இவர்களும் இரண்டு மணி நேரம் கவலை மறக்க வருகிறார்கள். இது ஒரு நிலையில்லா உலகம். கோடி கோடியாய்க் கொட்டுபவ னுக்கு கோதுமைக் கஞ்சி தரும் உலகமிது!'

அவனுக்கு அழவேண்டும் போலிருந்தது. ரமணன், 'வாழ்வது ரொம்ப ரொம்ப அபத்தம்' என்று நினைத்துக் கொண்டான். கரையில் கண்ணாடி, வெள்ளைப் பளிங்கு போன்ற நண்டுகள் ஓடி ஓடி திடீரென்று உள்வாங்கிக் கொண்டன. அலைகள் பேரிரைச்சலோடு கரை நுகர்ந்து சென்றன.

இந்த வானுக்கும் கடலுக்கும் உள்ள உறவு; ஓடிவரும் அலைகளுக்கும் கரைக்கும் உள்ள உறவு போன்று, ரமண னுக்கும் அவனைச் சுற்றியுள்ள ஜீவன்களுக்கும் உள்ள உறவை உணர்ந்துகொள்ள இயலவில்லை. ஒன்றை மட்டும் அவன் உணர்ந்தான். 'உலகத்தில் ஏழ்மையாய் இருப்பின், தனிமையில் இருக்க வேண்டும்.'

''நான் போறத்துக்குள்ளே அவளை கட்டிக்கோடா...''

''இப்ப இன்னா அவசரம்மா?''

''நான் இன்னைக்கோ நாளைக்கோன்னு கிடக்கேன். மனசார உன் கல்யாணத்தை பாத்துடறேனே...!''

''இந்த சம்பாத்தியத்தில இன்னொன்று வேணான்னா கேக்க மாட்டியா?''

''ஆமா...இது என்ன அல்ப ஆசை...?'' அம்மா சலித்துக் கொள்ள,

''சும்மா கிடம்மா. கல்யாணமும் மண்ணாங்கட்டியும் இப்ப எதுக்கு...?''

ஆனால் அம்மாதான் வென்றாள். தம்பி மகளை எப்படியாவது மகன் தலையில் கட்டிவிட வேண்டும் என்ற கொள்கை, அவளை வெற்றி கொள்ளச் செய்தது. எந்த அரசனும் பெற்றிராத வெற்றி!

அவளுக்கு உடம்பு மோசமானபோது, இருந்த மானா வரி நிலத்தை விற்று, வத்சலாவை ஏற்றுக்கொண்டான். இதில் அம்மாவின் தம்பி பிரச்சினையிலிருந்து விடுபட்டாகி விட்டது. பிறகு, வாடகைக்கு வீடு தேடியாயிற்று.

இது சூழ்நிலை சூழ்ச்சி போலிருக்கிறது. அம்மாவுக்கு நல்ல வேளையாக ஒருபக்க வாதத்தோடு படுக்கையாக ஆகும் படியாகிவிட்டது. மற்றபடி ஒன்றுமில்லை.

என்றாவது வத்சலாமேல் கோபம் தலைதூக்கும்...!

''நீ வந்ததுனாலதாண்டி என் வாழ்க்கையே போச்சு...''

அவளுக்கு மூலையில் குந்தி அழுவதைத் தவிர வேறொன்றும் தெரியாது. சிலர் பேசத் தெரியாது சாதிப்பது போல் வத்சலாவும் செய்கிறாளோ என்ற எண்ணம் வரும். பிறகு கஷ்டப்பட்டு தேற்றி, சாந்தப்படுத்துவான்.

ரமணன், வெண்மணலைப் பார்த்தான். இப்பொழுதும் நண்டுகள் குச்சிக்கால்களுடன் கொடுக்குகளுடன் ஓடுவதும் வளைக்குள் புகுவதுமாக இருந்தன. சின்ன வயதில் இவனும் வத்சலாவும் 'நண்டு வருது; நரி வருது' விளையாடியிருக்கிறார்கள். பிறந்த காலமும் — பால்ய காலமும் மின்னல் போன்றது. ஒரு குறிப்பிட்ட வயசுவரைதான் உலக நியதி தெரியாது இருக்கிறது. பிறகு? அட்சரசுத்தமான நரகம் தான்.

அவனுக்கு பனியனை மீறி, வியர்வை பெருக படியேறி மேலே வந்தான். நேற்று தின்றுவிட்டுப் போட்டிருந்த சுண்டல் பேப்பர்களும் ஐஸ்கிரீம் டப்பாக்களும், குச்சிகளும் சிதறியிருந்தன. ஏழு மணிக்குதான் கூட்டிப் பெருக்கித் தள்ளுபவன் வருவான். அதுவரை குப்பை மயமே!

சின்ன தார்ரோடு கடந்து, பிளாட்பாரத்தில் நிறுத்தி வைத்திருந்த சைக்கிளை எடுத்துக்கொண்டான். ஏறி, மெல்லவே மிதித்து...தம்பு நாயக்கர் தெரு வழியாக வந்த போது, ஹரிதாஸ் எதிர்பட்டார். தலைமை அக்கவுண்டன்ட்.

''என்ன ரமணா இந்தப் பக்கம்?''

''ரன்னிங் போயிட்டு வரேன் சார்...''

''குட்! ஆமா, நேத்து உனக்கும் யூனியன் லீடர் ஜெயராமனுக்கும் தகராறாமே...?''

''அதெல்லாம் எதுக்கு சார் இப்போ...?''

''இல்லைப்பா, தப்பு அவன் மேலதான்னு எல்லோருமே பேசிக்கிட்டாங்க. என்ன தகராறு?''

''அவனவனுக்கும் கஷ்டம் இல்லை திமிர் வரும்போது சண்டை போடத் தோணும் சார்! அதுல இது ஒரு வகையான சண்டை. நம்ம முருகேசனை ஆஃபீஸ் அவர்லே இல்லைன்னு பத்துநாள் 'மெமோ' கொடுத்தாங்களே...அதுக்காக அவன்

பிரண்ட் ஜெயராமன் வந்து, 'யூனியன் ஸ்டிரைக் செய்ய ணும்னு' சொல்ல, நான், 'முருகேசன் செஞ்சதுதான் தப்புன்னும் கலந்துக்க முடியாதுன்னும்' சொல்லிட்டேன். அதுக்கு அவன், 'மரியாதையா கலந்துக்கப்போறியா, இல்லையாடான்னு' மரியாதையில்லாம பேசினான்.

''எனக்கு மரியாதை முக்கியம்னு சொன்னப்போ காலரைப் பிடிச்சுட்டான். பிறகு, தகராறுதான். பின்ன என்ன சார், 'வொர்க் அவர்ல' வீட்டுக்குப் போய் வேலை செய்யப் போனா எவன் சும்மாயிருப்பான்? சரி, ஸ்டிரைக் செய்யரோம்னே வச்சுக்கிட்டாலும் அது நிர்வாகத்திற்கு நல்லதா போயிடுமே?"

''படிச்சிருந்தா உணருவானுங்க. எங்க...ம்...சரி, நான் வரட்டுமா? ஆஃபீஸ்ல பாப்பம்...!"

ஹரிதாஸ் குறுக்கு வழியில் திரும்பிச் சென்றார். ரமண னுக்கு இன்னும் பத்து நிமிடத்தில் வீடு வந்துவிடும். குளித்து, இருப்பதைத் தின்றுவிட்டு, வேகுவேகுவென்று அலுவலகம் போய்விட வேண்டும். அங்கே அதிகம் வேலையிருக்கும். காய்கறி, டீ-காபி வாங்கும் வரைக்கும் பைல்களை பைசல் பண்ணும் வரைக்கும் உடம்பு ஆடிப் போய்விடும். இதனால், முக்காலி தனித்துவிடும். உட்கார நேரம்? அவனுக்கு தன் மீதே கோபமும் ஆத்திரமும் சேர்ந்து வந்தன. 'சின்ன வயதில் ஒழுங்காகப் படித்திருக்க வேண்டும். ஊர் சுற்றாமல் படித் திருந்தால்... நேற்று ஜெயராமனிடம் தகராறு மூண்டிருக் காது. படித்திருந்தால் ஒரு கௌரவமான வேலையாவது கிடைத்திருக்கும்.

ஞானம், புத்திக்கு பிறகுதான் உதிக்கிறது. உலகில் படிப்பு ஒன்றே பெரிது. படிப்பு இருப்பின் உயர்ந்த வேலை, பணம் வரும். இப்பொழுதாவது குழந்தைகளை, தங்கையை ஒழுங்காக படிக்க வைக்க வேண்டும். வத்சலா, கதிர்காமத்

திலிருந்து வரும் நெசவு ஆலைகளில் உற்பத்தியாகும் அங்கவஸ்திரங்களுக்கு முனையில் முடிச்சு போட, கேட்டிருக்கிறாளாம்'.

ரமணன், பிள்ளைத்தோட்டம் பக்கமாக தன் சைக்கிளை வளைக்க, அருகிலிருந்த பிளாட்பாரம் முழுவதும் நிறைய இந்தியக் குடிமக்கள் குடிகொண்டிருந்தார்கள். இது இந்தியாவில் ரொம்ப அதிகம். உலை ஊதிக்கொண்டும், அழுக்குத் துணிகள், குழந்தைகளுடனும்...கடவுளே! இது ஏன்? உலகமே உயிருக்காக வாழ்கிறது. கஷ்டப்பட்டு வாழ்கிறது.

ஏழுமணி வெய்யில் லேசாக ஏறிக்கொண்டு இருந்தது. இழுவை வண்டிகளுடன் ஆட்களும் ரிக்ஷா ஓட்டுபவர்களும் ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள். இவர்களும் படிக்காதவர்கள். ரமணனுக்கு உச்சி சிலிர்த்தது. 'ஏதோ...பத்தாவது வரை படித்ததற்கு ஓர் அலுவலகத்தில், வெளியுலகம் அறிய வாய்ப்பில்லா 'கடைநிலை ஊழியன் பணி' பெரிதே! வண்டியிழுப்பதும்; ரிக்ஷா ஓட்டுவதும் தனக்கு நிச்சயமாக வராது, என உணர்ந்தான். அதற்கு இலாவகம் தேவை. குதிரையில் ஏறியனுக்கு லகான் பிடிக்கத் தெரிய வேண்டும். இந்த வேலையே கிடைத்திருக்காவிடில்? ஐந்து உயிர்களுடன் சேர்ந்து நிற்க வேண்டியிருந்திருக்கும். செய்யும் தொழிலே தெய்வம்.

அறுநூற்று சொச்சத்தில் உயிர்கள் வாழ்கின்றன. ரமணனுக்கு உற்சாகம் கிளம்ப, வீட்டிற்கு விரைவாக மிதித்தான். எல்லாம் முடிந்து, அலுவலகம் சென்றான். பக்தியுடன் வேலை செய்தான். இரவு நிம்மதியாகத் தூக்கம் வந்தது.

•

இன்னும் மீதி இருளிருந்தது. விடிவதற்கு அரைமணியாகும். ரமணன், மேலும் இதற்கும் அதற்குமாய் இரண்டு

'டிரிப்புகள்' ஒடி வந்தான். மூச்சு இரைத்தலுடன் வியர்வை அரும்புகளாய் முளைவிட்டது...

''அண்ணா, காலேஜ் ஒபனிங் ஆவப்போகுது. பழைய விலையில புக்ஸ் எல்லாம் சொல்லி வைத்திருக்கேன். ஒரு நூறு ரூபா வேணும்..."

''அப்பா, ஸ்கூல்ல 'டூர்' போறாங்கப்பா...''

''என்னங்க நம்ம சின்னப்பெண் உமாவை எல்.கே.ஜி. லேருந்து படிக்க வைக்கணும்ங்க...''

—நேற்று கேட்டவைகள் அவனுக்கு நினைவில் வர, ஏனோ ஆனந்தமாய் இருந்தது. ●

கணையாழி
பொங்கல் மலர்
ஜனவரி 1990

## மாறுவதில்லை

O

நாங்கள் குடியிருந்த காலனி, மூன்று பகுதி களைக் கொண்டிருந்ததாக ஞாபகம். பகுதிக்கு ஆறு வீடுகள். ஒரே மாதிரியான அமைப்பில் வீடுகள் அமைந்திருக்கும். நறுக்கி வைத்த முள்ளங்கித் துண்டுகள் போல. தம்பு, இரண்டா வது பகுதியில் படிக்கட்டு ஒட்டிய வீட்டில் இருந்தான். மூன்று பகுதிகளுக்கும் ஒரே விசாலமான மொட்டை மாடியை பத்தர் பிளான் போட்டுக் கட்டியிருந்தார். ஆங்காங்கு வீட்டினுள் (படுக்கையறை, வரவேற்பறை, சமையலறை) வெளிச்சம் வருவதற்கு கண் ணாடி பதித்த மேடைகள் காணப்படும். அழுத்தமான பச்சை நிறக் கண்ணாடிகள். மழைக்காலங்களில் ஜன்னல்களைச் சாத்தி விட்டால், வீடு அடக்கமாக குகை போன்று இருண்டுவிடும்.

தம்பு, நல்ல பளபளப்பான கருப்பு நிறமுடைய வன். பளீரென்று மின்னும் கண்கள். அவ னுக்கு 'வான்கோழிக் கண்ணா' என்ற சிறப்புப் பெயரும் உண்டு. சிரித்தால் வெள்ளைச் சுவராய் பற்கள். தந்தையைப்போல தனயனும்

நல்ல குண்டு. என் வீட்டில் நான் காணாவிட்டாலோ அல்லது அவன் வீட்டில் அவன் காணாவிட்டாலோ பெற்றவர் மாற்றி மாற்றி அவரவர் வீடுகளில் தேடிக்கொள்ளுமளவிற்கு நெருக்கம்.

மாலை நேரம் வந்துவிட்டால் மகிழ்ச்சி. பக்கத்து 'தோப்புத் தாத்தா' வாழையிலைகள் ஆடுவதைவிட, எங்களுக்கு குஷி அதிகம். 'டயர் வண்டி' என்று சைக்கிள் டயரை உருட்டிக் கொண்டு, மூன்றாவது தெரு வத்சலா—எங்கள் வகுப்புத் தோழி—வீடுவரைக்கும் தலைதெறிக்க ஓடுவோம். வத்சலா, வாசலில் நின்றிருப்பின் வேகம் அதிகரிக்கும். அவளது புன்னகை தாங்கி ஓடுவது மகிழ்ச்சிதான். நடுநடுவே டயரும் டயரும் மோதிக்கொண்டு சிறிது நெளிந்து ஓட...அதை சரிப்படுத்தி பழைய நிலைக்குக் கொண்டுவருவதில்தான் சாமர்த்தியப் போட்டி!

பிறகு, மொட்டை மாடி முழுவதும் எங்களது சொந்தம் என்பது போல ஓடிப்பிடித்து விளையாடுவோம். சரவணன் வாத்தியார்கூட எங்கள் காலனியின் மூன்றாவது பகுதியில் தான் குடியிருந்தார். அவர் மூன்றாம் வகுப்பு வாத்தியார். தம்பு, அவர் இல்லாத சமயங்களில் அவரது வீட்டு புகை போக்கியின் இடுக்கில் வாய் வைத்து ''ஊ...!'' என்று கத்துவான்.

அவரது மனைவி மேலே வருவதற்குள் தெருவில் இருப்போம். அவரது மனைவி கோபம் கொள்வதில் எங்களுக்கு அலாதியான இன்பம்.

தெரு—ஒரு பிடித்தமான பகுதி. பி. டபிள்யூ. டி. யிலிருந்து துப்புரவுத் தொழிலாளர்களால் வாரிப் போடப் பட்டு காய்ந்து போயிருக்கும் சகதிகளைக் கிளறி, கோலிக் குண்டுகள், வெண்கூழாங்கற்கள் சேகரிப்போம். எனக்கு ஒருமுறை பத்துபைசா கிடைத்தது. எனவே, தினமும் நம்பிக்கையுடன் கூடிய ஆவலான கிளறல்கள். மழை நாட்களில் தெரு பனிச்சென்று பாதரஸம் போன்றிருக்கும்.

நிறைய வெண்கூழாங்கற்கள் கிடைக்கும். ஆனால். அம்மா தான் விடமாட்டாள்.

''சனியனே...மழையில நின்னுக்னு...'' என்று உதை விழுவதுண்டு.

அன்றொரு நாள், புகைபோக்கி வழியாக தம்பு கூக்குர லிட்டபோது. சரவணன் வாத்தியார் திடுமென்று மேலே வந்து கையும் களவுமாக பிடித்துவிட்டார். எனக்கு மார்கழிக்கால உதறல். தம்புவுக்கு டிரவுசர் ஈரமாகிவிட்டது. அழ ஆரம்பித்து விட்டோம். ஆனால், சரவணன் வாத்தியார் எங்களை அடிக்க வில்லை. பிடியைத் தளர்த்தி, போய்விட்டார். அவரது கண்ணாடியை மீறிய முறைப்பு பிறகு எங்களை மொட்டை மாடிக்கே போகவிடவில்லை. அவர் தனது வகுப்பு மாணவர் களை செம்மையாக அடிக்கக்கூடிய விஷயம் எங்களுக்குத் தான் தெரியும்.

நாங்கள் மூன்றாம் வகுப்பிற்கு மாற்றப்பட்டோம். சரவணன் வாத்தியார்தான் இருந்தார். எங்களைப் பார்த்த தும் அவருக்கும் அவரைப் பார்த்ததும் எங்களுக்கும் புன்னகை. எதிலும் எங்களுக்கே முன்னுரிமை தரப்பட்டது. இதனால், பலருக்கு, பலரில் ஒருத்தியான வத்சலாவுக்கும் வருத்தம்.

அம்மாதிரி நேரங்களில் அவள் மேலும் சிவந்து போவாள்! அட்டெண்டன்ஸ் கொண்டுவர, சாக்பீஸ் எடுத்து வர, 'பெரிய வாத்தியாரிடம் போக', மற்றவர்களிடம் 'இடை வேளை' டீ காசுகளை வசூலிக்க, பேசுபவர்களை பார்த்துக் கொள்ள, ஜென்ஸி டீச்சரிடம் ஏதோ மடிக்கப்பட்ட காகிதம் தர... (டீச்சரும் மறு காகிதம் தருவார்கள்) என எல்லாவற் றுக்கும்நானும் தம்புவும்தான்.

சரவணன் வாத்தியார் ஸ்டைலாக இருப்பார். சராசரி உயரம், சுருண்ட தலைமுடி, அழகான வளைவு மீசை, தங்க பிரேம் மூக்குக்கண்ணாடி, 'வி' டைப் காலர் வைத்த சட்டை

கள், 'பெல்ஸ்' என்று கவரத்தக்க விதத்தில் இருப்பார். ஜென்ஸி டீச்சரிடம் பேசும்போது ஒரு புன்னகை உதடுகளில் நிரந்தரமாய் இருக்கும்.

காலப்பறவையின் இறக்கையை எவராலும் முறிக்க முடிவதில்லை. தம்பு, திருச்சியில் 'சிவில்' படித்து வருகிறான். நான் மலேஷியாவில் 'ஹோட்டல் மானேஜ்மெண்ட்' படித்து வருகிறேன். விடுமுறையில் இந்தியா வந்தேன்.

தம்புதான் வரவேற்றான். நிறைய மாற்றம் என்னைப் போலவே. அவனது அன்பின் பிடிப்பு பன்னிரெண்டு வருடங்களுக்கும் உரியதாயிருந்தது. கடிதத் தொடர்பு இருந்திருப்பினும் அருகாமை தொடர்பு இனிமையானதுதான். வீட்டில் அவனது அறையில் பழைய நினைவுகளைக் கிளறினேன்.

''ம்ஹூம், தொடர்பு வுட்டுப் போச்சுடா. வாழ்க்கை அப்படி. படிப்பு, எதிர்காலம்னு ஓடிக்கிட்டிருக்கு. அப்புறம் பாண்டிச்சேரிக்கு போக வாய்ப்பே கிடைக்கலை. வத்சலா, அங்க 'மோதிலால்ல' சிவில் படிச்சுக்னு இருக்கிறதா கேள்விப் பட்டேன். கொடுக்காபுளி செல்வம் தூக்கு மாட்டிக்கிட்டு செத்துப்போயிட்டானாம். காதல் தோல்வியாம்... கஷ்டமாயிருந்தது. அவசரப்பட்டுட்டான்!"

நான் கலக்கமுற்றேன். பறவைக் கூட்டத்தில் ஒரு பறவை இப்போது இல்லை. எங்களுள் நீண்ட மௌனம்.

''சரவணன் வாத்தியார் பற்றி ஏதாவது தெரியுமா?''

''அவரோட நினைவு மட்டும்தான் இருக்கு..."

''பாண்டிச்சேரிக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்து பார்ப்போமே, எனக்கு எல்லோரையும் பார்க்கணும்னு தோணுது...!''

பிள்ளைப்பிராய மண்ணை மிதித்ததும் சிலிர்த்தது. பாண்டிச்சேரியில் நிறைய நிறைய மாற்றங்கள். மக்கள் பெருக்கம், டெம்போக்கள், ஆட்டோக்கள், ஸ்கூட்டர்கள் பெருகிவிட்டன. எங்கும் அடைத்துக் கொண்டு மக்கள்தான். இன்னும் பத்து வருடங்களில் எப்படியிருக்குமோ என்று யோசிக்க வைத்தது. எங்களது இடம் வந்தது.

மரமும் புற்றும் இருந்த இடத்தில் பெரிய கோயில் எழுப்பப்பட்டிருந்தது. செம்மண் வீதிகள் தார்ப் பூச்சுகளால் போர்த்தப்பட்டிருந்தன. தூரத்தே...'தோப்புத் தாத்தா' வாழை மரங்கள் பாதி இடத்தில்தான் சூழ்ந்தபடி ஆடிக்கொண்டிருந்தன. மீதி இடத்தில் உயரமான மாடி வீடு முளைத்திருந்தது. பத்தர் காலனி புதிய மஞ்சள் வர்ணம் பூசப்பட்டு ஜி.எச். மாதிரி தோற்றம் கொடுத்தது. அதைச் சுற்றி ஓடிய சகதிகள் இல்லாது, சிமெண்ட் கால்வாய்களில் சாக்கடை நீர் தெளிவாக ஓடிக்கொண்டிருந்தது. அப்பா.. எத்தனை மாற்றங்கள்!

''இங்க சரவணன் வாத்தியார்...''—தம்பு, ஒருவரிடம் கேட்டான். அவர் கையைக் காட்டினார். சரவணன் வாத்தியார் தெருமுக்கில் சைக்கிளில் வந்துகொண்டிருந்தார்.

அவர் அடையாளம் கண்டுகொண்டார். அப்படியேதான் இருந்தார். சுருண்ட கேசம், வளைந்த மீசை, தங்க பிரேமிட்ட மூக்குக்கண்ணாடி, 'வி' டைப் காலர் கொண்ட சட்டை, பெல்ஸ்...கொஞ்சம்கூட மாற்றமில்லை. சிறு பருவத்தில் சந்தித்தவராய்த்தான் இப்போதும் தோற்றமளித்தார். எவ்வளவு நாகரிகங்கள், மாற்றங்கள், விசித்திரங்கள் நாட்டுக்கு நாடு தோன்றிவிட்டன? இவர் இன்னமும் 'வி' காலரும் பெல்சுமாய்...நேற்று முளைத்த காளான்களான நாங்கள் இப்படி முன்னேறியிருக்க...

'ஆசிரியன் என்ற மனிதன் தன் மாணவர்களை மட்டுமே வளர்த்திருக்கிறான். தன் மாற்றத்தை அவன் பொருட் படுத்துவது இல்லை' என்பதை உணர முடிந்தது இப்போது.

தம்புவின் பெயர் மட்டும்தான் அவருக்கு நினைவில் இருந்தது.

''நா...ராஜசேகரன்! ராஜி! ஹவ் ஆர் யூ..ஸார்...?'' என்றேன். அவரது கையிலிருந்த புத்தகம் என் கண்களில் பட்டது. அது—

மூன்றாம் வகுப்புத் தமிழ் புத்தகம். நாங்கள் படித்த போதிருந்த அட்டைப்படமில்லை. வேறு படம். அனேக மாய் புதிய வெளியீடாய் இருக்க வேண்டும்! ●

பாக்யா
டிசம்பர் 1993

## ஆத்மாக்கள்

O

நான்கு முறை கதவு தட்டப்பட்ட பிறகு, அண்ணிக்காரி கதவைத் திறந்தாள்.

''வா...ராஜி...!''

இவன் புன்னகைத்து பின் தொடர்ந்தான். குகைபோன்று நீண்டு செல்லும் ஒருதாழ்வாரம். ஒரே இருட்டு. நுழைந்தவுடன் நடக்க சற்று சிரமப்பட்டான். ஆனால், அண்ணிக்காரி விருட்டென்று நடந்தாள். அவளுக்கு பழக்கம். இவன் எப்பொழுதாவதுதான் வருவது. அப் பாதையின் ஓரங்களில் தட்டுமுட்டுச் சாமான் கள் சிதறியிருந்தன. பழைய நடைவண்டி தனது ரோஸ்-பச்சை நிறங்களை இழந்து ஒருக்களித்துக் கிடந்தது. ஒரு பெரிய பானை, சில மரச்சட்டங்கள், விளக்குமார் முதலியன கண்களுக்குப் புலப்பட்டன. கொடியில் ஒரு பழைய நைலக்ஸ் புடவை நீளவாக்கில் ஆடிக் கொண்டிருந்தது.

ஒருமுறை இருமிக் கொண்டான். நெஞ்சு சற்று வலித்தது. எதிர்பட்ட சின்ன கதவு ஒரு பக்கம் மட்டும் திறந்திருந்தது.

''ஏங்க, உங்க தம்பி வந்திருக்கு...'' என்றாள். செருப்பை ஓரமாக உதறினான்.

''உங்க அண்ணா இப்பொதான் வெளிய கௌம்பணும்னு சொல்லிக்னிருந்தார்...!''

''ம்...!'' என்றான். உள்ளே நுழைந்தான். அண்ணன் காரன், வயதான அவனது மாமனார் இருவரும் அந்த பழங் காலக் கட்டிலில் அமர்ந்திருந்தனர். அண்ணன்காரன் கைலி கட்டிக்கொண்டு, இரு முட்டிகளுக்கும் தோதாக கைகளைக் கோர்த்துக் கொண்டு அமர்ந்திருந்தான். பெரும்பாலும் அப்படித்தான் அவன் அமர்வது. உடன் நெட்டை முறித்துக் கொண்டிருப்பான். அவனுக்கு மாத்திரம் நெட்டைகள் 'சொடக்...சொடக்' என்று விழுந்து கொண்டேயிருக்கும்.

''வாடா...!" என்றான்.

''வா...!'' என்றார் மாமனார்.

சமையலறையிலிருந்து சிவப்பாக வெளிவந்த மாமி யாரும், ''வாப்பா...!'' என்றாள்.

இவன் ஒரு புன்னகையுடன் உயரமான அக்கட்டிலில் பட்டும்படாமல் அமர்ந்தான். மூக்கில் விழுந்த கண்ணாடியை மேலே தள்ளிவிட்டுக் கொண்டான். இலேசாய் வியர்த்தது. அண்ணனின் குழந்தை—இரண்டு வயது—தூளியில் வாய் ரப்பருடன் உறங்கிக் கொண்டிருந்தது. கட்டிலை ஒருமுறை நோட்டம் விட்டான். கருகருவென்று தேக்கில் உருவான அது உயர—அகலமாய் அறையின் முக்கால் பாகத்தை அடைத்துக் கொண்டிருந்தது. பூர்வீகச் சொத்து. அதன் மேல் முன்னால் புடவை, இந்நாள் தலையணையின் உறை களாய் இருந்தன. மூலையில் சில விளையாட்டுச் சாமான் களும் புழுதிச் சாயலில் கிடந்தன. அண்ணிக்காரி விளை யாடிய பொருட்கள் என்று நினைத்துக்கொண்டான்.

''என்ன, ஏதாவது விஷயமா?"—அண்ணன்.

''ஒண்ணும்ல. சும்மாதா, வந்தேன்...'' என்றவன், வந்த விஷயத்தை தனியாகக் கூறவேண்டுமென்று நினைத் துக் கொண்டான்.

''சைக்கிள்லயா வந்தே...?''

''ம்...!''

இப்பொழுது மாமனார் தன் பக்கமாக தான் பணிபுரியும் கம்பெனியின் கணக்கு நோட்டுகளை இழுத்துக் கொண்டார். பிரித்து வைத்து பென்சிலால் கோடு போடத் தொடங்கினார். மூக்குக்கண்ணாடி அவரது நீண்ட மூக்குக்கு பொருத்தமாய் இருந்தது.

''அம்மா எப்பிடியிருக்காங்க, ராஜி...?'' அண்ணிக்காரி ரொம்ப நேரம் கழித்து கேட்டாள்.

''நல்லாருக்காங்க...!''

''ஏம்பா, ஒருநாளிக்கு அவுங்களைக் கூட்டுக்னு வர்றது தானே...?'' என்றாள் மாமியார்.

''ம்...''

''ஏண்டா, அம்மாவ கூப்டுகிட்டு வந்திருக்கலாம்ல...?'' அண்ணன்காரனின் குரல் மெதுவாக விழுந்தது.

''கூப்டுகிட்டு வர்றேன்...''

''என்னிக்குபா...?''—மாமியார்.

''வரனே, கூப்டுகிட்டு...!''

''வா ராஜி. இது யார் வூடு? நம்ம வூடு...!'' என்ற அண்ணிக்காரி, வியர்வையைப் பார்த்து மின்விசிறியைப் போட்டாள். 'டரடர'வென்று ஒரு புதிய சப்தம் எழுந்து அது பழக்கமாகிப் போனது.

''சுமதி, குடிக்க ஏதாவது குடு...!'' என்று அண்ணன் காரன் அவளிடம் கூறினான்.

''தோ வரேன்க. ராஜி, ஹார்லிக்ஸ் குடிப்பேல்ல...?'' என்றாள்.

இவனுக்கு சில வினாடிகள் ஹார்லிக்ஸைப்பற்றி பூதாகர மான எண்ணம் எழுந்தது.. அவர்கள் அப்படித்தான். 'உப்பு போட்டுப்பேல்ல...?' 'வெந்நீர் குடிப்பேல்ல?' 'காரட்

பிடிக்கும்ல...?' என்று ஜாக்கிரதையாய் ஓர் கேள்வி கேட்டு வைப்பார்கள். உடலின்மேல் அவ்வளவு அக்கறை. ஆனால், எல்லோரும் ஈர்க்குச்சி போல்தான் இருக்கிறார்கள். அண்ணன்காரனும் ஒல்லியாகிக் கொண்டிருக்கிறான்.

''இல்ல, இப்பதான் குடிச்சிட்டு வந்தேன். ஏதும் வேணாம்...!"

''யேன், ஹார்லிக்ஸ் குடிப்பேல்லே?"

''குடிப்பேன்; இப்ப வேணாம்!"

''யேன்? கொஞ்சம் கொண்டுக்னு வர்றேன்...'' என்று கட்டை விரலையும் ஆட்காட்டி விரலையும் தொட்டுக் காட்டி விட்டு, சமையலறைக்குள் நுழைந்தாள்.

மாமியார் கீழே அமர்ந்தாள். இவன் அவளை நோக்க, அவளும் நோக்கினாள்.

''அம்மாவ கூப்டுகினு வாப்பா...!'' என்றாள்.

தலையாட்டினான்.

கொஞ்சம்போல அமைதி நிலவியது. அமைதியைமீறி, அறையின் வாசனை நாசியை நெருடியது. அண்ணன்காரன் நெட்டை முறித்துக் கொண்டான். அருகிலிருந்த சில புத்தகங்களை எடுத்துக் கொடுத்தான். இவன் வாங்கிப் புரட்டினான்.

''அந்தமான்லே தமிழ் புஸ்தகமெல்லாம் கிடைச்சுதா...?" அண்ணன்காரன்.

''ம்...ஆனா அம்பது காசு ஏர்-சர்சார்ஜ் வாங்கிடுவான்..." என்றான் இவன்.

''சுத்திப் பார்த்தியா...?"

''ம். அருமையான தீவு...!''

இப்பொழுது, தூளியிலிருந்த குழந்தையிடம் சற்று அசைவு எழுந்தது. சிறிது சிணுக்கம் வெளிப்பட்டது.

அண்ணன்காரன் உதட்டில் கையை வைத்து சைகை காட்ட, மாமியார் மெல்லத் தூளியை ஆட்டிவிட்டாள். இவன் புத்தகத்தை ஓசையின்றிப் புரட்டினான்.

''இந்தா ராஜி...'' இரு கைகளாலும் ஹார்லிக்ஸ் பொத்தப்பட்டு வந்தது. வாங்கிக் கொண்டான்.

''சூடு பரவால்லயா...?''

''கரெக்டாயிருக்கு..." என்றான். வெதுவெதுப்பாய் அதில் நிறம் மட்டும் இருந்தது. ஏதும் வாசனையே எழ வில்லை. மெல்லக் குடித்தான்.

இவனுக்கு அண்ணனை ரொம்பப் பிடிக்கும். நல்ல தேர்ந்தெடுத்த சினிமாக்களை பார்ப்பான். அதன் கதைகளை, சிறப்புகளை அழகாக அம்மாவுக்கும் இவனுக்கும் கூறுவான். மற்றவர்களைப் பார்க்கத் தூண்டுவான். எல்லாவற்றிலும் உச்சத்தையே நோக்குவான். நல்ல இலக்கியங்களைத் தேடி எடுத்து வருவான். மனிதர்களை எடை போடுவதில் சாமர்த்தியசாலி. ஆனால், கல்யாணப் பருவத்தில்தான் அவன் தவறி விட்டான்போல் உணர முடிந்தது.

காதல் கல்யாணம் அது இதென்று ஒன்றுமில்லை. வீட்டின் சூழ்நிலையைப் பார்த்து 'இவர்களால் இப் போதைக்கு கல்யாணம் பண்ணிவைக்க முடியாது' என்று தீர்மானம் செய்துகொண்டு, தனது நண்பர்கள் வட்டம் மூலம் ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்து கல்யாணம் செய்துகொண் டான். தாலி கட்டியவுடன்தான் நண்பர்களின் சூழ்ச்சி புரிந் தது, பெண்வீட்டார் வசதியற்றவர்களென்று. அப்பொழுது தான் வங்கிக் கடனில் ஒரு ஆட்டோ வாங்கியிருந்தான். குடும்பம் நடத்த அந்த ஆட்டோ பத்தாயிரம் ரூபாய்க்கு கடனில் கைமாறிப்போய், வங்கியில் வட்டி அதிகமாகி, அதன் இறுதிநிலைச் சம்பவங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக் கிறான்.

அண்ணிக்காரி வித்தியர்சமாகக் குழந்தை பெற்றுக் கொண்டாள். ஒரு மாதத்திற்கு மேலாக 'பெட்' ரெஸ்ட்டில் இருந்தாள். அவளது 'வீக்கான' உடம்புக்கு தினமும் நாற்பது ரூபாய் மதிப்புள்ள ஊசி போட வேண்டியிருந்தது. எனவே, அண்ணனின் கடன் சுமை அதிகமானது. பெண் வீட்டார் முன்னெச்சரிக்கையாக அண்ணன்காரனால் தாங்கள் ஏமாற்றப்பட்டு விட்டதாகவும்; பெண்ணைப்பாழுங்கிணற்றில் தள்ளிவிட்டதாகவும் ரகளை பண்ணி, அவனை குற்றவாளியாக்கி விட்டார்கள். ஏனெனில், அவன் அவர்களது இரண்டே இரண்டு பவுன் நகையை அடகில் வைத்து, முழுக அடித்திருந்தான். மாமனார் ஏதோ நானூறு ரூபாய் சம்பாதித்தார். அண்ணன்காரன் கடைநிலை ஊழியன். எனவே, குறைவற்ற கடன்காரர்கள்.

''மாலினி அக்காவப் பார்த்தியா?" என்றான் அண்ணன்காரன்.

''ம்..." என்ற இவன் வீட்டை ஒருமுறை பார்த்தான். அந்த ஒரு அறையும் மிக அடைசலாகவே இருந்தது. கண்ணாடி போட்ட ஒரு அலமாரி, ஒரு பழைய மேசை, அக்கால பிருமாண்ட வானொலி, பிளாஸ்டிக்பூ ஜாடிகள், சுவற்றில் குடும்பத்தாரின் சிறுவயதுப் படங்கள், அரபிந்தோ ஸ்ரீஅன்னையின் கருணைச் சிரிப்பு காலண்டர், மீன் வாங்கும் ஓலைப் பை...மேலே சிறு பரணில் துருத்திக்கொண்டிருக்கும் ஹைதர் காலத்து தேவையற்ற வஸ்துக்கள்...தான் இங்கு இருந்திருப்பின் இந்நேரம் பயித்தியம் பிடித்து அலைந்திருக்க வாய்ப்பு உண்டு என்று நினைத்துக்கொண்டான். எழுந்தான்.

''என்ன கிளம்பிட்டியா...?"

''இல்லண்ணா, சும்மாதா...!'' என்று கதவைத் தாண்டி சிறு நடைபாதைக்கு வந்தான். அண்ணன் புரிந்து கொண்டு எழுந்து வந்தான். அவனுக்குத் தெரியும், தம்பிக்

காரன் ஏதாவது விஷயத்தோடுதான் வந்திருப்பானென்று. இவனோடு ஒட்டி நிற்க, சொன்னான்:

''முத்துசாமி உன்னோடு பணம் விஷயம்பத்திப் பேசணு மாம். உன்னை வந்து பாக்கச் சொன்னாரு. இல்லாட்டி இங்க விட்டுக்கே வந்திடுவாராம். ரொம்பக் கடுப்பா இருக்கார். மூவாயிரம் வாங்கியிருக்கியாமே? வட்டி வேற ஏறுதாம்....''

அண்ணன்காரன் கீழே கிடந்த நடைவண்டியை சற்று நோக்கினான், பிறகு சொன்னான்:

''அவனுக்கு எப்பிடியாவது குடுத்துடணும். நீயும் சொல்லு. அண்ணன் வந்து பாக்கறதா சொல்லச் சொன்னார்னு...!''

இவன் மறுத்தான்.

''நீயே நாளைக்கி பார்த்து நேர்லயே சொல்லிடு. இப்பத் தரேன், அப்பத் தரேன்னு சொல்லிட்டு வந்துடு...''

''நான் எப்படிடா? அவன் கத்துவான்..."

''பின்ன கத்தமாட்டாரா? நேர்ல பார்த்து நெலமய சொல்லிடு. அப்புறம், இங்க வந்து கத்தினா நல்லாவா யிருக்கும்...?''

அண்ணன்காரன் தலையாட்டி, சற்று அமைதியானான். பிறகு, ''சரி, உள்ளே வா..." என்றான்.

மறுபடி கட்டிலில் அமர்ந்தார்கள்.

''சத்யா எப்போ தூங்கினான்? இந்த வயசுலயும் ஏன் வாயில ரப்பரை வச்சுகிட்டு தூங்கறான்?" என்றான் இவன்.

''அவன் இன்னா சொல்லுற பேச்சா கேக்குறான்? ரொம்ப வாலுப்பா இவன். ரப்பரை எடுத்தா 'வீல்னு' கத்த

ஆரம்பிச்சுடுறான். உனுக்கு எங்கப்பா தெரியப்போகுது? நீதா ஆடிக்கும் அமாவாசைக்கும் வரியே...!'' என்று மாமியார் செல்லமாய்க் கடிந்து கொண்டாள்.

''எழுப்பி விடுங்களேன், பாக்கலாம்...''

''ஐயோ இப்ப எழுப்புனா அவ்ளோதான். வூட்டை ரெண்டு பண்ணிடுவான். இவனை பாதியில எழுப்பக் கூடாது. கோவம் வரும் பாரு...!'' என்று அண்ணிக்காரி முடித்தாள்.

இவன், அண்ணன்காரனைப் பார்த்தான், யோசித்துக் கொண்டிருந்தான் அவன். மாமனார் இன்னும் நுணுக்கி நுணுக்கி கணக்கு போட்டுக் கொண்டிருந்தார். இவனுக்கு புறப்படலாம் போலிருந்தது. எழுந்தான். சைக்கிள் சாவி செயினைச் சுழற்றியபடி, ''நா வரேன்...'' என்றான்.

''ஏம்பா...'' என்றாள் மாமியார்.

''இரு ராஜி. சமைச்சு சாப்டுட்டு போலாம்...'' என்றாள் அண்ணிக்காரி.

''ஏய்...இருடா...'' —அண்ணன்காரன்.

மாமனார், ''இரு...'' என்றார்.

''இல்ல, நா வரேன்...!''

''சாப்டுட்டுப் போப்பா...''

''வேணாம். இன்னொரு நாளைக்குப் பாத்துக்கலாம்...''

''எங்க நீ வரே...?'' —அண்ணிக்காரி.

''இல்ல வரேன்...''

''எப்போ...?''

''வரேன்...!''

''அம்மாவோட ஒரு நாளிக்கி வந்துட்டுப் போப்பா. இது உங்க வூடு மாதிரி...''

''சரி, வரேன்...'' வேகமாய் செருப்பை மாட்டிக் கொண்டு, தலையாட்டி எழுந்து நடக்க, அண்ணன்காரன் உடன் வந்தான். இவன் சைக்கிளில் ஏறி, அவனைப் பார்த்து தலையசைத்தான்.

''ம், போயிட்டு வா. ஏ... ஏ... காலர்லே ஒரு எறும்பு ஏறுது பார்...!''

இவன் தட்டிவிட்டு, ''வரேன்...'' என்று சைக்கிளை மிதிக்க ஆரம்பித்தான். ●

*நினைவுகள்*
*மீதமிருக்கும்*

○

ஒரு சுவடு இல்லை. அந்த ஒற்றைப் புளிய மரத்தை எப்படிதான் வேரோடு பிடுங்கினார் களோ தெரியவில்லை. அதுதான் எங்களை அப்போது அரவணைத்திருந்தது. மூன்று ஆள் பருமனுக்கு நெடுநெடுவென்று உயரமாய் கிளைகள் பரப்பி பிருமாண்டமாய் காட்சி யளித்த அம்மரம் இப்போது இல்லை. அத னருகில்தான் ஒரு பம்பு செட்டு நான்கு சிமெண்ட் தடுப்புக் கட்டைகளுடன் இருக்கும். காலை ஒன்பதுமணி வரை நீண்ட துருபிடித்தக் குழாயிலிருந்து சொடசொடவென்று வெண்மை யாய் நீர் பாய்ந்து கொண்டிருக்கும். ஐந்தடி தொலைவில் கல்மேடையில் அமர்ந்திருப்பினும் நீரின் சில்லிப்பு பனித்தூறலாய் உடம்பில் பரவும். இப்போது அதன் சுவடும் கிடையாது. வாய்க்காலையொட்டி வேலி தரித்து, நீண்ட வயல்வெளி இருக்கும். குழந்தையின் பிஞ்சு விரல்களைப்போல கதிர்கள் ஆடிக்கொண்டிருக் கும். காற்று எப்பக்கம் வீசுகிறதோ அப்பக்கம் ஒருக்களித்தபடி நிற்கும் பச்சையை பார்ப்பது இனிமை. வரப்புகளில் கொக்குகள் சர்வ சாதாரணமாய் நடமாடும். கிருஷ்ணப் பருந்து கள், கொக்குகளுக்குப் போட்டியாய் மீன்களைத்

தேடி கொண்டிருக்கும். இப்போது, வயலையே சுருட்டி யெடுத்துக்கொண்டு போய்விட்டதுபோல அடியோடு ஏது மில்லை.

அண்டிக்கிடந்த முட்புதர்கள், பாம்புப் புற்றுக்களிலும்கூட வானளாவிய கட்டிடங்களை எழுப்பிவிட்டனர். மனிதர் களுக்கு வீடுகள் தேவைப் பட்டுக்கொண்டேயிருக்கின்றன.

அந்த அகன்ற புளியமரம் இருந்த இடத்தில் ஒரு பெரிய டயர் தயாரிப்புச் தொழிற்சாலை உருவாகிக் கொண்டிருந் தது. எனக்குள் சோகம் பரவியது.

அந்த மரத்தின் பரவியிருந்த வேர்ப் பகுதிகளின் வலிமை யான பகுதிகளில்தான், நானும் நாகராஜியும் எப்போதும் அமர்வது. பேசிக் கொண்டேயிருப்போம். இலக்கியப் பரிவர்த்தனைகள் அலுப்பதில்லை. நாகராஜிக்கு கவிதை களும் நாடகங்களும் எழுதவரும். சிலுசிலுவென்ற பரந்த காற்றில் கவிதைகள் படிக்கும்போது உலகம் மறக்கும். எங்களது கற்பனைகள் மரத்தைப் போலவே விரிந்து சிறகடிக்கும்.

''இலக்கிய உலகத்துல நம்ம பேரு பேசப்படணும், காந்த்...!" என்பான் நாகராஜி.

''நம்ம படைப்புகள் எல்லா பத்திரிகையிலும் வரணும். புகழ் கிடைக்கணும்..."

''ஒரு இலக்கியப் பத்திரிகை கொண்டு வரணும்...!"

நாகராஜி, ''காயத்திரியை எப்படியாவது கட்டிக்க ணும்" என்றதும் அம்மரத்தடியில்தான். காயத்ரி அவ னுடைய காதலி. அப்போது கதிர்காமத்தில் பத்தாவது படித்துக்கொண்டிருந்தாள்.

பலபலவென்று ஊற்றெடுக்கும் ஆசைகள்; எதிர்காலம் குறித்த நம்பிக்கைகள்.

''இன்னைக்கு காலைல அம்பதுகாசு சைக்கிளுக்கு செலவாச்சு...'' என்றான் நாகராஜி.

''எதுக்குடா...?''

''காலைல ஸ்பெஷல் கிளாஸாம்! இங்கேருந்து ஸ்கூலுக்குப் போனேன். அவ வராண்டாவுக்கு வர்ற வரைக்கும் நின்னுக்னிருந்தேன். நம்ம பாஷாகடை சைக்கிள் தான்...!''

பரீட்சைக்கான படிப்புக்கு நிழல் தந்ததும் அந்த மரம் தான்! மறுநாளைய பரீட்சைக்கு முன்தினம் வேக வேகமாய் படிப்போம். நெஞ்சில் தேர்வின் திகில் ஒட்டிக்கொண்டே படித்து, நிறையவே மதிப்பெண்கள் பெறுவோம். இது அந்த மரத்தின் ஆசி போலும்!

நாகராஜி, நிலக்கடலை, பனங்கிழங்கு, தென்னங் குருத்து, புளிச்சகாய் என்று தினமும் வகை வகையாய் கொண்டு வருவான். நேரம் போவது தெரியாது. பள்ளி ஒண்ணரை மணிக்குதான். பனிரெண்டு மணி வாக்கில் வீட்டுக்குச் சென்று, சாப்பிட்டுக் கிளம்புவோம்.

பள்ளிக்கூடம் இருந்த காந்தி நகரில்தான் முருகன் வீடு. எங்களது நண்பன். அவன் எங்களது வருகைக்காக காத் திருப்பான். தினமும் சலவை சட்டை போட்டுக்கொண்டு, மொடமொடவென்று பெரிய மனுஷனைப்போலிருப்பான். மூவரும் இ.எஸ்.ஐ. அருகில் கல்மேடையில் காத்திருப்போம்.

ஒருமணி வாக்கில் நீலநிற யூனிபார்ம்கள் தென்பட ஆரம்பிக்கும். நாங்கள் ராஜகுமாரர்களாகி விடுவோம். முளை விட ஆரம்பமாயிருக்கும் மீசையைத் தடவிக்கொள்வோம். சட்டை 'இன்'னை நேர்படுத்திக் கொள்வோம். தலையைச் சரி செய்து கொள்வோம். முருகன் 'எக்ஸ்' மாதிரி நின்று கொள்வான்.

பாவாடை, சட்டை, தாவணி எல்லாம் நீல நிறம்தான். தாவணிமட்டும் சற்று வெளிர் நீலத்தில் இருக்கும். பெரும்

பாலும் நூருண்ணிசா சல்வார்தான் அணிந்து வருவாள். வெடவெடவென்று உயரமாய் இஸ்லாமியக் கண்களோடு இருப்பாள். தூரத்திலேயே நாங்கள் அவளைப் பார்க்கிறோமா என்று தெரிந்துகொண்டு பிறகு, தலையை தாழ்த்தியபடி தனது நண்பி மகேஸ்வரியோடு பேசிக்கொண்டு வருவாள்.

நூருண்ணிசா எங்களுக்கு நூரி!

நூருண்ணிசாவின் அப்பாவும் நல்ல உயரம். மிலிட்டெரிக்காரர் மாதிரி, கூரிய கண்களுடன் மீசையில்லாது இருப்பார். அனேக நேரங்களில் தனது வீட்டின் சிமெண்ட் பூச்சோடு இருக்கும் காம்பவுண்டின்மேல் சாய்ந்து சட்டையில்லாது வெறும் கோடு போட்ட டிரவுசரோடு இடுப்பில் ஒரு கையை ஊன்றிக்கொண்டு நின்றபடி சுருட்டுப் பிடித்துக் கொண்டிருப்பார். நாங்கள் பார்த்த போதெல்லாம் அப்படித்தான் இருந்திருக்கிறார்.

நாகராஜி ஜோக் அடிப்பான்: ''நூரியோட அப்பா ஒத்தைக் கால்சட்டையோட சுருட்டு புடிச்சிக்னுதான நிப்பார்? முருகா, நீ மட்டும் அவளைக் கட்டிக்னன்னு வச்சுக்கோ, உனக்கும் ஒருகால்சட்டைதான் கிடைக்கும். அதப்போட்டுக்னு நீயும் நிக்க வேண்டியதுதா...!''

குபீரென்று சிரிப்போம்.

நான் என்னை சினிமா கதாநாயகனாக உணர்வேன், முருகன் சீரியஸாய் பேசிக்கொண்டே நூருண்ணிசாவை கடைக்கண்ணால் காதல் பார்வை வீசுவான். அப்புறம் வரிசையாய் கவுண்டன்பாளையம், சுப்பையாநகர், குண்டுபாளையம், பேட்டையான் சத்திரம் பகுதியிலிருந்து வயதுக்கு வந்த தேவதைகள் வந்து கொண்டேயிருப்பார்கள்.

பிறகு பதினைந்து நிமிடங்களில், நாகராஜி, பாஷாகடையில் சைக்கிளை எடுத்துக்கொண்டு காயத்ரியைப் பார்க்க அவளது பள்ளிக்குப் போவான்.

எங்களது இலக்கியத்தின் ஒரு பகுதியாக நாங்கள் அழகிய பெண்களையும்—காதலையும் நினைத்தோம். எங்களை ஒரு பெண் விரும்ப ஆவலுடன் எதிர்பார்த்தோம்.

மறுநாள் புளியமரத்தடியில் முதல்நாள் நடந்த நிகழ்ச்சி களை பேசிக் களிப்போம். நாகராஜி, காயத்திரி அவனைப் பார்த்து அழகாக புன்னகைத்துச் சென்றதைக் கூறுவான். அவளைப் பற்றிய அன்றைய கவிதை வரிகளைப் படித்துக் காட்டுவான். நான் திலகர்நகர் நான்காம் வீதியிலிருந்து வரும் பாலாவின் பார்வையின் அர்த்தமென்ன என்று கேட் பேன். எங்களுக்குள்தான் எத்தனை வண்ணங்களில் கனவு கள்; ஆசைகள்!

நீண்ட பெருமூச்சு விட்டேன். எல்லாச் சின்னங்களும் அழிக்கப்பட்டு விட்டன. டயர் கம்பெனியின் ஒரு பகுதி யிலிருந்து புகைபோக்கி கரும்புகையை வெளியேற்றிக்கொண் டிருந்தது. மதிய வெய்யில் ஊசியாய் உடலைத் தாக்கியது. அனல்காற்றுதான் இப்போது உடலை அரவணைத்தது.

''என்னடா யோசிக்கிறே...?'' என்றான் நாகராஜி.

''ம்...ஒண்ணுமில்ல. நம்ப புளியமரம் இல்லாதது ஒரு மாதிரியாயிருக்கு...!'' என்றேன்.

''அந்தமான்லே என்ன மொழி...?'' என்று நினைவு களை உடைத்தான்.

''லோக்கல் பாஷை ஹிந்தின்னுதான் வச்சுக்கோயேன். தமிழர்களும் மலையாளிகளும் ஹிந்தியை பொளக்கிறாங்க. இன்னா சரளம் தெரியுமா?'' மறுபடியும் என்னை பழைய ஞாபகங்களே வியாபித்தன.

''முருகன் இன்னாடா செய்யறான்?'' என்றேன்.

''அண்ணா காலேஜ்ல பி.காம். கடைசி வருஷம். வாரா வாரம் ஊருக்கு வந்துட்டுப் போவான்...!''

''நூருண்ணிசா?''

''ப்ளஸ் டூவில ஒருதடவை குத்திகிட்டா. என்னைப் போலதா! இப்ப பாரதிதாசன்ல பி.ஏ. சேந்திருக்கிறதா மாதவன் சொன்னான்...''

நான் காயத்ரியைப் பற்றிக் கேட்கவில்லை. அவள் பருவக் கோளாறால் கஸ்தூரிபாய்நகர் சலவைக்கார பைய னுடன் ஓடிவிட்டு பிறகு வீடு வந்து சேர்ந்தது தெரியும். அவளது தாய் தலையில் அறைந்துகொண்டு ஒப்பாரி வைத்தாளாம். மகள் திரும்பி வந்துவிட்டால் மனக்குள விநாயகருக்கு நூற்றியெட்டு தேங்காய் உடைப்பதாக வேண்டினாளாம். மகள் திரும்பியபின், கஷ்டப்பட்டு அடங்கி னாளாம். பையன் அழகாக தாலி கட்டியிருந்தானாம். அது வரைக்கும் பரவாயில்லை. அப்புறம், சலவைக்கடை சற்று விரிவு படுத்தப்பட்டதாம்.

நாகராஜி அதில் மனம் உடைந்தவன்தான். ஒருதலைக் காதலென்று முடிவானபின் முறித்துவிட்டு மனசைத் தூக்கி போட அவனால் இயலவில்லை. அவளாலேயே ஒவ்வொரு படியாய் ஏறியவன், இறுதிநிலை பரீட்சையில் வெற்றிபெற முடியவில்லை. அதன் பிறகு, அவன் இயந்திரமாய் வாழ்ந்து கொண்டிருப்பது பற்றி அவனது கடிதங்களிலிருந்தும் நண்பர் கள் மூலமாகவும் அறிந்தேன்.

நானோ அருகிலிருக்க முடியாமல் அந்தமானுக்கு வந்து விட நேர்ந்துவிட்டது. எங்களது இடம் குறித்த வழக்கில் வெற்றி பெற்றதால் பாண்டிச்சேரியைவிட்டு கப்பலேறினோம். நான் கப்பற்படையில் எழுத்தராகச் சேர்ந்தேன். சுமார் இரண்டு வருடங்களுக்குப்பின் பிழைத்த ஊருக்கு வந்த வனுக்கு மனதில் காயங்கள்.

இலக்கிய உலகில் எனக்கு ஓரளவு அங்கீகாரம் கிடைத் தது. எனது படைப்புகள் பத்திரிகைகளில் வெளிவந்தன. பாவம், கனவு கண்ட நாகராஜிதான் எதிலும் காலூன்ற முடியாது போனான்.

''என்னைக்குக் கப்பல்?''

''நாளன்னைக்கு கிளம்பிடுவேன்...!''

''நிறைய எழுது...''

''ம்...''

''அடுத்து எப்போ வருவ...?''

''ரெண்டு வருஷம் ஆவும். நாகராஜி, மீதிப் பேப்பர் களை எழுதி முடிச்சுடு. எதுனா வேலையைத் தேடிக்கோ. சும்மா பிரமையாய் சுத்திக்னு இருந்தா நமக்கும் கஷ்டம். வீட்லேயும் அங்கீகாரம் கிடைக்காது. எல்லாத்தையும் உதறித் தள்ளிட்டு, புதுசா ஒரு பயணத்தைத் தொடங்கு...''

அவன் மெல்ல சிரித்து, தலையாட்டினான்.

''சரி, பத்ரமா போய்ட்டு வா. லெட்டர் போடு. முருகனையும் போடச் சொல்றேன் உனக்கு...!'' என்றான். கைகளை இறுகப் பற்றினான். நான் சற்று புறவெளியில் பார்வையிட்டேன் புதிய கட்டிடத்தின் வாய்க்காலோரத்தில் நிறைய புளியஞ்செடிகள் துளிர்த்திருந்தன. செந்நிறமாய் கொட்டைகள் பிளந்து இளம்பச்சைத் துளிர்கள். யாரோ பழம் தின்றுவிட்டோ அல்லது வீடுகளிலிருந்தோ கொட்டை களை போட்டிருக்க வேண்டும். மனசு கனமாயிருக்க, சைக்கிளில் ஏறினேன்.

அவ்வருடத்தின் இறுதியில் முருகன் என்னுடன் தொலை பேசியில் தொடர்பு கொண்டான். நாகராஜி காலாப்பட்டுக் கருகில் கடலில் விழுந்து தற்கொலை செய்துகொண்டதாக வும் உடனே விமானத்தில் புறப்பட்டு வரும்படியும். ●

*தாயாகி விட்டேன்*
*காதலர;*

○

இரவில் என் ஆழ்ந்த உறக்கத்தின் மத்தியில் திடுதிப்பென்று பார்த்திபன் கனவில் வந்தான்.

நாங்களிருவரும் ஒரு வாழைமரக் கிளையில் தொற்றிக் கொண்டிருக்கிறோம். தொற்றிக் கொண்டே காதலிக்கிறோம்.

''ஐ லவ் யூ...வத்சலா...!''

''வேணாம், கூச்சமாயிருக்கு. காத்து பலமா வீசுது. கிளை முறிஞ்சுடப் போவுது...'' அவனது மீறலை நான் முனகலுடன் தடுத்தாலும் எனது பருவம் அதனை ரசிக்கிறது. அருகிலிருந்த வாழைக்குலை திடீரென்று பழுத்து செம்மஞ்சள் நிறத்தில் பளீரிட, நாங்கள் அப் பழங்களில் சிறிது உண்ணுகிறோம். மறுபடி என்னைக் கவிபாடத் தொடங்கிய பார்த்திபன் தவறுதலாய் ஒரு மட்டையில் கால்வைக்க, சரசரவென்று கீழ்நோக்கி.. அசுர வேகத்தில் பாய்கிறான். தொடர்ந்து என் பிடியும் நழுவ,

புடவை பறக்க நானும் கீழ்நோக்கி...
திடுக்கிட்டு விழித்தேன்.

'சே, என்ன கனவு இது! பார்த்திபன்... பார்த்திபன் எதற்காக என்னுள் வியாபிக்க வேண்டும்?'

என் தங்கை அகிலா சென்ற மாதம் பதினேழாம் தேதி வயதுக்கு வந்தவள், முழங்கால்களின்மேல் பாவாடை ஏற தூங்கிக் கொண்டிருக்க, கீழே இழுத்து விடுகிறேன். அவ ளருகில், சகுந்தலா அக்கா சோகமாய்த் தூங்கிக் கொண்டிருப் பது போல பட்டது எனக்கு.

அம்மாவின் வயிற்றில் ஒற்றைக்காலைப் போட்டபடி, வாயில் வழியும் எச்சிலுடன் நாங்கள் எதிர்பார்த்திராத வேளையில் அகாலமாகப் பிறந்த எங்களது தம்பி தூங்கிக் கொண்டிருந்தான்.

சகுந்தலாவும் நானும் ஆளாகி நிற்கும்போது, அகிலா வின் உடம்பில் பளபளப்பு தட்ட ஆரம்பித்தபோது, அம்மா முற்றத்தில் வாந்தியெடுத்தாள். உள்ளறையில் அப்பாவிடம் 'இரண்டு மாதம்' என்றாள். அப்பா அதிர்ச்சியாகவில்லை. அவரது கண்களில் பிரகாசம். நாங்களே அதிர்ச்சியின் முழுச் சதவீதத்தை உட்கொண்டோம். உள்ளுக்குள் குன்றினோம்.

எங்களுக்கு தம்பி பிறந்தான். அப்பா, அம்மாவுக்கு மகிழ்ச்சி. குடும்பத்தில் முதல் ஆண். எங்களைச் சுற்றி ஏற்பட்ட இகழ்ச்சிகளுக்கு இதயங்கள் பழக்கமாகிவிட, விட்டேத்தியாய் மகிழ்ச்சி ஏற்பட்டது.

சகுந்தலா அக்காவின் திருமணம் ஒரு மிகப் பெரிய கேள்விக்குறியாய்ப் போனது அப்பாவைத் தவிர. திருமணம் என்றால்தான் குறிப்பாக பெண்ணுக்கு நகைகளும் பணமும் தேவைப்படுகிறதே! வந்த மாப்பிள்ளைகள் பேரம் பேசினர்.

அப்பா, அடுத்த மூன்றாவது வருடத்தில் முதல் மாரடைப்பிலேயே நிம்மதியாய் இறந்து போனார்.

தட்டுத்தடுமாறி ப்ளஸ் டூ முடித்த என்னை அப்போது அப்பாவின் ஆணதிகாரம் தடுக்கப் பார்த்தது. மேற்கொண்டு படித்து என்ன கிழிக்கப் போகிறாய் என்பது போல எதிர்த்

தார். சுலபமாய், ''கதிர்காமம் தியாகு முதலியார்ட்ட சொல்லிட்டு வந்துட்டேன். அவரு தறிகொட்டாயில தறி ஓட்டக் கத்துக்க தலைகாணிக்கு முனையில முடிச்சுப் போடு. வூட்டுக்கும் கொஞ்சம் கொண்டுவந்து போடறேன். சகுந்தலா வும் அகிலாவும், ஒங்க அம்மாவும் இன்னாத்த கிழிக்குதுங்க? நல்லா வருமானம் வரும்...!" அந்த குடியின் மயக்கத்திலும் வார்த்தைகள் பிசிறின்றி விழுந்தன.

''நா மேல படிக்கலாம்னு இருக்கேன்...''

''இன்னாத்துக்கு...?"

''நா படிச்சு, ஒரு வேல கிடைச்சுதுனா குடும்பத்த காப்பாத்த முடியும்னு நினைக்கிறேன்..."

''அதப் படிச்சுதான் செய்யணுமோ? நாளைக்கு கதிர் காமம் போ!''

''அப்பா...வேண்டாம்ப்பா"

அம்மாவின் மடியில் விழுந்து கதறினேன். சகுந்தலா அக்கா என் புஜங்களை ஆதரவாகப் பிடித்தாள்.

''நீ பெரிய ஆளா வரணும். வத்சு...''

எனக்கு பிடிமானமாய், ஆதரவாய் ஒரு உயிர். அவளை இறுக்கிக் கொண்டேன்.

'ஜாப் டைப்பிங்' பகுதி நேரத்தில் செய்துகொண்டு பி.காம். முடித்தேன். எகனாமிக்ஸ் வாத்தியார் ஒரு தனியார் அலுவலகத்தில் வரவு செலவு பகுதியில் வேலை வாங்கிக் கொடுத்தார். மாதம் அறுநூறு கொடுத்தார்கள்.

'எம்ப்ளாய்மெண்ட் எக்ஸேஞ்சில பதிஞ்சுவை. நேரம் வந்தா எல்லாம் நல்லபடியா முடியும்!" வாத்தியார் கூறினார். எனது பக்கம் நல்ல நேரம் வந்தது. வீட்டு வசதி வாரியத்தில் தட்டச்சாளராக அரசு பணி கிடைத்தது. அன்றுதான் ஒரு தெம்பு பிறந்தது. முதன்

முதலாய் நிலவையும் அதைச் சார்ந்த நட்சத்திரங்களையும் ரசித்தேன். அப்பாவைச் சார்ந்திருந்த நம்பிக்கையை நான் தட்டிப் பறிந்துக் கொண்டேன். அக்காவிற்கு கண்களில் ஆனந்தக் கண்ணீர் வந்தது. என் முன்னேற்றத்தைக் காண அப்பா இப்போது இல்லை.

என் சொற்ப வருமானத்தில் எனது திட்டங்கள் மிகப் பெரியதாயிருந்தன. அக்காவின் திருமணம், அகிலாவின் படிப்பு, தம்பிக்கு ஒரு நல்ல எதிர்காலம்...நான்? நான் எனக்கொரு கேள்விக்குறியானேன். தையல் இயந்திரம் ஒன்றை வாங்கிப்போட்டு, நாங்களனைவரும் ஜாக்கெட், டிரவுசர் தைத்துக் கொடுத்தோம். வண்டி ஓடத் தொடங்கியது.

இருளின் ரீங்காரம் ஒலிக்க, எழுந்து பாத்ரூம் போனேன். ஆசுவாசமானேன். ஜில்லென்ற தண்ணீர் குடித்தேன். வெப்பம் தணிந்தேன்.

ஒரு பெண்ணுக்கு ஏற்படும் உபாதைகள் எனக்கும் சொந்தம்தானே! என்னதான் கட்டிப்போட்டாலும் எனது பருவம் அடங்க மறுத்தது. வெப்பம் மிகுந்தது. ஏதோவொன்றை எதிர்பார்த்து தவித்தது மனம். அடக்க முயன்று, கஷ்டப்பட்டேன். அவசரம் கூடாது என்று பிடியைத் தளர்த்த முயன்றேன். ஆனாலும் ஒரு நாளின் இருபத்திநாலு மணி நேரமும் அக்னியாய் தெரிந்தது. அந்த அக்னி, நேற்று பார்த்திபன் கொடுத்த கடிதம் மூலம் கொழுந்துவிடப் பார்த்தது.

ஆண்கள் அழகாகக் காதற்கடிதம் எழுதுவார்கள் போலிருக்கிறது. அவர்களுக்கு வளைத்துப்போடும் எண்ணம் ஒவ்வொரு 'செல்லிலும்' உருவாகுமோ? பார்த்திபனின் கையெழுத்து குண்டு குண்டாய் இருந்தது. அவனா எழுதினான் என்று என்னுள் ஆச்சரியமாய் இருக்கிறது.

அலுவலகத்தில் அமைதியாய் வந்துபோவது அவன் மட்டுமே! ஒரு கிண்டலில்லை. ஒரு ஆரவாரமில்லை.

என்னை நிறைய பேர் இரட்டை அர்த்தத்தில் அணுகியிருக்கிறார்கள். அலுவலகக் காண்டீனில் என்னைப்பற்றி சுலபமாய் எடை போட்டனர். இளமையை வருணித்தனர். நான் அமைதியைக் கடைபிடித்தேன். இனியும் நான் புழுவாய்த் துடிக்க விருப்பவில்லை. பட்டாகிவிட்டது. இவர்களுக்கு மத்தியில் பார்த்திபன் நிச்சயமாய் வித்தியாசப் படுகிறான் தான்.

எனக்கு அவனிடத்தில் சில அம்சங்கள் பிடித்திருந்தன. குண்டு குண்டான கையெழுத்து, வேலையின் சுத்தம், மரியாதை, வெளிர்நீல நிறச் சட்டை, நெற்றியில் தவழும் சிறு திருநீற்றுப்பட்டை, ஒரு கண்ணியமான புருஷன். ஆனாலும் என்னால் தீர்மானமாக இயங்க முடியவில்லை.

நானும் உலக பிருகிருதிகளில் ஒருத்தி. என் உணர்வுகளும் மதிக்கப்பட வேண்டும். நானும் இல்லறத்தில் ஈடுபட வேண்டும். பிஞ்சாய் ஒரு குழந்தை பெற்றுக்கொள்ள வேண்டும்; சைக்கிளில் சந்தோஷமாய் புருஷனுடன் சினிமா போக வேண்டும்...இவையெல்லாம் காலம் வரும்போது. அது மிகவும் தூரத்திலிருக்கிறது. நானொரு சுமைதாங்கி. இன்பமான சுமைகள். அக்காவுக்கு நல்ல இடத்தில் திருமணம் செய்து வைக்கும் கடமை, அகிலா, தம்பியைக் காக்கும் கடமைகளென்று நிறைய இருக்கின்றன. தேவைகளும் அதிகம். காலமும் அதிகமாகும்.

உலகில் பிறந்தோம்; வாழ்ந்தோம்; இறந்தோம் என்று இல்லாமலிருக்க எனக்கு இது வாய்ப்பு. எனக்கும் ஒரு கவிதைக் குடும்பம் இருக்கிறது. என் சகுந்தலா அக்கா, தங்கை அகிலா, தம்பி ஆகியோர் அதன் அங்கத்தினர். அவர்கள் எனது பிள்ளைகள். நான் பெறாத பிள்ளைகள்.

காலை, டீ பிரேக்கில் பார்த்திபன், ஆவலுடன் எதிர் பார்ப்புடன் என்னை பயபக்தியோடு நோக்கினான். அவனது பருவக்கோளாறு அது.

'பார்த்திபன், எனக்கு மூன்று குழந்தைகள் இருக்கும் போது எப்படியப்பா என்னை சுயம்வரம் செய்துகொள்வாய்?'

வாசுகி
மே 1992

சிறுபத்திரிகை ஈடுபாடு, கனமான வெளிப் பாடுகளை கைக்கொள்வதில் ஆர்வம், புதுமைப் பித்தன் தொடங்கி வளர்ந்துவருகிற இலக்கியப் போக்கில் கவனம், தொடர்ந்து படித்துக் கொண்டிருப்பதில் மகிழ்ச்சி, இலக்கிய உரை யாடல்களில் மட்டற்ற இன்பம் என்று வளர்ந்து கொண்டிருக்கிறார் ரஜனி. இது ஆரோக்கிய மான வளர்ச்சிப் போக்கை ரஜனிக்குத் தந்திருக் கிறது என்பதன் சுவடுகளை இந்தக் கதைகளில் நீங்கள் பார்க்கலாம்...

—பிரபஞ்சன் மதிப்புரையிலிருந்து